# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – ஆவணி

2020 – ஆகஸ்ட்



உத்ரகாண்ட் மாநிலத்தில் ரிஷிகேஷ் திருநகரில் நம்முடைய கோவிலூர் வேதாந்த மடத்தில் நடந்து வரும் மழலையர் பள்ளிச் செல்வங்கள் சிறுதேர் உருட்டி, கங்கைக் கரை சென்று வரும் காட்சி.

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – ஆவணி
2020 – ஆகஸ்ட்    இதழ் – 98

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ்    ரூ **10.00**
ஆண்டுச் சந்தா    ரூ **100.00**




உ
சிவமயம்

# இறை வணக்கம்

ஓரறிவு முதலா ஐயறிவு உயிர்ப்பைங் கூழ்தழைய

ஒருங்கு காக்கும்

பேரறிவு வெளிப்படுப்பான் ஊறுஉணர்ச்சி உயிர்ப்பயிர்முன்

பிறங்கக் காத்துக்

காரறிவு தபக்களைந்து காரண நோக்குறும்

பெரியயோர் கட்கு ஆநந்த

நேரறிவு மயமான நெல்லை நாயகி மலர்த்தாள்

நினைந்து வாழ்வாம்

– கோவிலூர்ப் புராணம்



# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

இந்தக் கொரோனா வைரஸ் பரவல் சமயத்தில் முடங்கிக் கிடக்கும் மூளைக்கு ஓரளவாவது வேலை கொடுக்க வேண்டும். பொழுதை நற்பொழுதாகக் கழிக்க வேண்டும் என்ற ஆர்வத்திலே பல ரூபங்களில் முயற்சிகள் நடந்து வருகின்றன.

இணையவழிக் கல்வி, இணையவழிக் கலந்துரையாடல், இணையவழித் தொடர் சொற்பொழிவுகள், இணையவழி இலக்கிய வகுப்புகள் எனப் பற்பல முயற்சிகள் நடக்கின்றன, வெற்றி பெறுகின்றன. இணைய வழியிலே கலந்துரையாடல், கருத்தரங்கம் பலவிதமான இணையக் கருவிகளின் உதவியோடு (mobile apps) நடைபெறுகின்றன.

நம்முடைய கல்லூரிகளிலும் இணைய வழிக் கருத்தரங்குகள், கலந்துரையாடல்கள் நடத்துகிறார்கள். கலைக்கல்லூரியின் சார்பாக யோகாவின் பயன்கள், விளக்கங்கள் குறித்து ஒரு மணி நேரக் கலந்துரையாடலும் செயல்முறை விளக்கமும் தரப்பட்டன.தகவல் தொடர்புத் துறையின் சார்பாக இணையவழிக் கலந்துரையாடல் நடைபெற்றது. அடுத்ததாக, கணினித் துறை, வணிகவியல் துறை, தமிழ், ஆங்கிலம், என்று அனைத்துத் துறைகளும் இணையவழிக் கலந்துரையாடல் ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கின்றன. உடற்கல்வியியல் கல்லூரியின் சார்பாக யோகா பயிற்சி, யோகாவின் மூலம் மருத்துவம்,மூச்சுப் பயிற்சி (yoga practice, yoga therapy, pranayama) இவற்றைப் பற்றி மூன்று நாட்களுக்கு அத்துறையில் மிகவும் பேர் பெற்ற அனுபவமுள்ள மூன்று பெரியவர்களைக் கொண்டு கருத்தரங்கம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இவை அனைத்தும் நமக்கு நஷ்டத்தில் சிறிதளவு ஈடாக, இலாபமாகக் கிடைத்துள்ளன.

இந்த முடங்கிக் கிடக்கும் காலத்தில் புத்துணர்ச்சி தரக்கூடிய நல்ல விஷயங்களைத் தொடர் சொற்பொழிவு மூலம் சில அமைப்புகள் தருகின்றன. அவை கேட்பதற்கு இதமாகவும், மனதிற்குத் தெம்பாகவும், மகிழ்வாகவும் இருக்கின்றன.

கைவல்ய நவநீதத்தின் தத்துவ விளக்கப்படலம் முழுமையும் வகுப்புகளை வேதாந்த ஆச்சாரியார் மிக அருமையாக நிதானமாக, தெளிவாக, சொற்பொழிவு ஆற்றி வருகிறார்கள். இவற்றைச் சொற்பொழிவு என்று கருதுவதைவிடக் கைவல்ய நவநீத வகுப்பு என்றே கருதுகிறோம். ஏனெனில் முக்கியமான பாடல்களைச் சொல்லி அதற்குரிய பொருள் விளக்கம் அனைத்தையும் உரைத்து, தத்துவங்களை மனதில் ஆழமாகப் பதிய வைக்கின்ற சொற்பொழிவுகள்; எனவே அவை சொற்பொழிவுகள் அல்ல; வகுப்புகள்.

சுவாமி வேதானந்தா அவர்களுடைய உழைப்பிற்கும் முயற்சிக்கும் ஆழமான வேதாந்த ஞானத்திற்கும் நம் மனமார்ந்த தலைதாழ்ந்த வணக்கங்கள் பாராட்டுக்கள்.

அதே போல் அண்ணல் கம்பன் அடிப்பொடி சா.கணேசன் அவர்களால் தொடங்கப் பெற்று 80 ஆண்டுகள் நிறைவு பெற்ற காரைக்குடி கம்பன் கழகத்தின் மூலமாக, கம்ப இராமாயணத்தின் 6 காண்டங்களையும் படலம் வாரியாக நன்கு கற்றுத் தேர்ந்த சொற்பொழிவாளர்கள் பலரைக் கொண்டு இணையத்தில் பதிவேற்றிக் கம்பன் அன்பர்கள் கண்டு, கேட்டு மகிழ அளிக்கிறார்கள். இது ஒரு மகத்தான தொண்டு.

கம்பனை முழுமையான அனைத்துக் காண்டங்களையும் கேட்டுப் பயிலவும் ஓரளவிற்கு இராமாயணத்தில் அறிவைப் பெறவும் அனுபவிக்கவும் தொடர்ந்து வாய்ப்பைத் தருகிறார்கள்.

இந்த மகத்தான தொண்டினைச் செய்து வரும் காரைக்குடி கம்பன் கழகத்திற்கும் அதன் நிர்வாகிகள் அனைவருக்கும் குறிப்பாக நண்பர் கம்பன் அடிசூடி பழ.பழனியப்பன் அவர்களுக்கும் நம்முடைய மனம் நிறைந்த பாராட்டுக்கள்; வாழ்த்துக்கள்.

கம்பன் பெயர் சொல்லிக் கன்னித் தமிழ் வளர்க்கும் காரைக்குடி கம்பன் கழகம் இது போன்ற அரிய தொண்டுகளைத் தொடர்ந்து செய்து கம்பர் புகழை வளர்க்கவும், கன்னித் தமிழைச் செழிப்புறச் செய்யவும் எல்லாம் வல்ல பரம்பொருள் அருள் புரிவாராக.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

## சசிவன்ன போதம் (தொடர்ச்சி)

**(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)**

*9. தம்தாபம் அற்றப ரன்ஏவல் செய்த*
*அவன்உற்ற பேறுதனை முன்*
*செந்தாம ரைக்கண்மு தல்வர்க்கும் எம் அண்ணல்*
*திருவாய் மலர்ந்தது இதுவே.*

அப்படிப்பட்ட பிரம்மஞானிக்கு மனம், வாக்கு, காயத்தால், அடிபணிந்து நால்வகைச் சேவைகளையும் செய்து அவருடைய அன்பைப் பெற்ற ஒரு சீடனுடைய வரலாற்றைச் செந்தாமரைக் கண்ணனாகிய திருமாலுக்கு முக்கண்கள் உடைய பரமசிவன் திருவாய் மலர்ந்து கூறிய கதை இதுவே.

நால்வகைச் சேவைகள் ஆப்தம், அங்கம், ஸ்தானம், சிரத்தை ஆகும். ஆப்தம் என்பது குருமகானுக்கு மனதிற்குப் பிடித்தவற்றைச் செய்தல். குருவினுடைய சில ஆசைகள் சாதாரண நெறிமுறைகளுக்குச் சற்றே அப்பாற்பட்டவையாகக் கூட இருக்கலாம். இருப்பினும் அவர் விருப்பத்தைப் பூரணமாகத் திருப்தி செய்வது சீடனுடைய கடமையாகும். உதாரணமாகச் சிலகுருமார்களுக்கு வினோதமான அற்பப் பொருள் மீது விருப்பம் இருக்கலாம்; அப்படி இருந்தாலும் அவற்றைப் பூர்த்தி செய்ய வேண்டும். கோவிலூர் மரபு வேதாந்தியான மகாஞானிபொன்னம்பல சுவாமிகளுக்கு மசால்வடை என்று அழைக்கப்படும் பருப்பு வடையிலே விருப்பம் அதிகமாம்; அதனை அவருடைய சீடர்கள் வாங்கி வந்து அவர் உண்டு களிக்கப் பார்த்து மகிழ்ந்திருக்கிறார்கள். இன்றும் திருவாரூர் மடப்புரம் தட்சிணாமூர்த்தி மடத்தின் குருமகா சந்நிதானமாக வீற்றிருந்து அதன் பின்னர் சிதம்பரம் கோ.சித மடத்தைத் தொடங்கிய காரணத்தால் அவருடைய குருபூஜை தட்சிணாமூர்த்தி மடத்திலே சிறப்பாக நடத்துகிறார்கள்; பருப்பு வடைகள் தவறாமல் படைக்கப் படுகின்றன. இதே போல, குருமகானுடைய விருப்பங்களை நிறைவேற்ற வேண்டும்.

அங்கம் என்பது குருமகானுடைய உடலுக்குச் செய்கின்ற சேவை; அவர் உடல் நலத்தைப் பாதுகாப்பது. கை கால் பிடித்து விடுவது. அவருடைய ஆடைகளைத் துவைப்பது போன்ற சேவைகள் அங்கம் என்ற வகையில் சேர்க்கப்படும்.

ஸ்தானம் என்பது குருமகானுக்குரிய சொத்துக்கள் – நிலம், பயிர், ஆஸ்ரமம், ஆடு, மாடு ஆகியவற்றைப் பாதுகாப்பது, அவற்றைப் பயன் தரும் வகையில் வளர்ப்பது ஆகியவை ஆகும்.

சிரத்தை என்பது குருமகான் போதிக்கின்ற காலத்தும் சாதாரணமாக உரையாடும் காலத்தும் அவருடைய சொற்களை, கருத்துக்களைப் பொன்னெனப் போற்றுவதும் சாட்சாத் ஈசனுடைய வார்த்தைகளாகக் கருதி ஏற்று ஒப்புக் கொண்டு பணிவுடன் பின்பற்றுவதும் ஆகும்.

*10. உவமிப்பின் ஞானவி ழிபட்டு முன்னை*
*வினைவிட்டு முத்தி உலகில்*
*தவமற்ற வெய்யவி னையேபு ரிந்த*
*சசிவன்னன் எய்து கதையே.*

ஈடு இணையற்ற பிரம்மஞானி ஒருவரின் (நயன தீட்சை) விழியின் ஒளி பட்டு, அருள் பெற்று, பல பிறப்புகளில் செய்த பிழைகள் அனைத்தும், சேர்த்து வைத்த பாவங்கள் எல்லாம் பறந்து ஓட நிர்மலமாகி முக்தி பெற்ற சசிவன்னன் என்பவனுடைய கதையே இது.

*11. ஏமம் புகுவார் உளபா தகராம்*
*யாவர்க் குளும்மிக் கவன்ஆ கும் இவன்*
*நாமம் புகல்வார் குலமும் எரிவாய்*
*நரகம் புகுமா றுநடந் தனனே.*

சசிவன்னன் என்பது வெள்ளை நிறத்தவன் என்பது ஆகும். இவன் தன் வாழ்நாளிலே செய்யக்கூடாத அனைத்துப் பாவங்களையும் கொடூரச் செயல்களையும் செய்தவன். கொலை, கொள்ளை, பிறன் மனை நாடுதல், பலரையும் அலட்சியம் செய்தல், பெற்றோரை அவமதித்தல், பொருள் வளமும் இளமையும் தந்த அற்ப பலத்தால் அனைவரையும் துன்புறுத்தி மகிழ்தல்; இப்படிப்பட்ட அளவிலாப்

பாவங்களைச் செய்த காரணத்தால் இக்கயவன் பெயரைச் சொன்னாலே நரகத்தில் விழக்கூடிய பாவம் கிட்டும்.

*12. மலம்மே வியதீ வினையின் வலியால்*
*மகிழ்உம் பர்பதத் திலிருந் தஇவன்*
*குலம்மே வியதென் புலவா ணர்களும்*
*கொடிதுஆம் நரகம் குடி ஏறினரே.*

மும்மலம் கூடிய கொடூரச் செயல்களினாலும் அவன் பெற்ற பாவங்களினால் சொர்க்கப் பிராப்தி அடைந்திருந்த அவன் முன்னோர்கள் நரகக் குழியில் தள்ளப்பட்டுத் துன்புற்றார்கள். இங்ஙனம் பல தலைமுறைகளைச் சேர்ந்த புண்ணியவான்களும் இவனுடைய பாவச் செயல்களினாலே நரகத்தில் குடியேற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

*13. மிகமே வியபுண் ணியபா வம்எனும்*
*வினையின் பயன்மேல் ஒருகா லம்உறாது*
*இகமே வரும்என் பதனால் உளநோய்*
*எல்லாம் இவனைச் செறஎய் தினவே.*

இப்படிப்பட்ட பாவங்களைச் செய்ததினால் அடுத்த பிறப்பில் தான் துயரம் நிகழும் என்பது இல்லாமல் அவனுடைய இந்தப் பிறப்பிலேயே துயரங்களை அனுபவிக்க நேரிட்டது. தீச்செயல்களால் தீராத வியாதியைப் பெற்றுத் துன்பம் அனுபவித்தான், வெள்ளை நிறத்தவன் ஆனான்.

*14. தன்புத் திரநே யம்விடா மையினால்*
*தவறுஉற் றஇவன் பெறுதந் தைஉளம்*
*துன்புற்று இனிஎன் னைகொலோ புதல்வன்*
*துயர்தீர் வகையென் றுசுழன் றனனே.*

இந்தப் பாவி எத்தனை பாவங்களைச் செய்திருந்தாலும் புத்திர பாசம் என்னும் பந்தத்தால் கட்டுண்ட இவன் தந்தை (பாகயஞ்ஞன்) தன்மகன் இவ்வாறு துயர் உறுவதைக் காணச் சகிக்காமல் துயரத்தில் உழன்றான்.

*15. ஒன்றா லும்வினைத் துயர்துய்ப் பதுஅலால்*
*ஒழிவிக் கும் உபா யம்உனக்கு இலதே*
*என்றா லும்அறிந்த வன்அன் புவிடாது*
*இவனைக் கொடுஉழன் றனன்எங் கணுமே.*

வினையின் பயனை அனுபவித்தே தீர வேண்டும் என்ற நியாயம் சசிவன்னன் தந்தைக்குத் தெரிந்திருந்தாலும் புத்திர பாசத்தை விட்டொழிக்க இயலாத தந்தை இவனை ஒரு கூடையில் ஏந்தி நாலா திசைகளிலும் இவனுடைய பாவம் தீர வழி கிடைக்காதா என்று அலைந்து திரிந்தார்.

*16.ஒருமா தவன்மற்று இவன்வே தனைகண்டு*
*ஒழிவற்று உளஒன் றைஉளத்து உணரும்*
*பரம்ஆ கியஞானிகள் கண் உறலே*
*பரமஅ விழ்தம்என் றுபகர்ந் தனனே*

இப்படி அலைந்து திரிகின்ற காலத்திலே நல்ல மனத்தை உடைய, மாதவங்கள் செய்த ஒரு புண்ணியவான் தந்தையினுடைய வேதனையைக் கண்டு இரங்கி முற்றும் துறந்த பிரம்மஞானியுடைய அருட்பார்வையும் கருணையும் கிட்டினால் இவனுடைய நோய் தீரும் என்று உரைத்தான்.

இப்படிப்பட்ட ஒரு மாதவன் கண்ணிலே படுவதற்குச் சசிவன்னனுக்குப் பரம்பொருளின் அருள் கூட்டி வைத்துச் சசிவன்னனின் தந்தை அந்த மாதவனைக் கண்டு பரம்பொருளின் தூதுவனாகவே கருதி மகிழ்ந்தான். பரம்பொருள் செய்யும் உதவிகள் யாவும் ஒரு ஜீவாத்மா மூலமாகத்தான் செய்தலாகும் என்பது இதன் வழி அறியலாம்.

*17.தான்அந் தம்இலா ததனைத் தருவான்*
*சத்தீச் சுரம்என் னும்இடம் தனில்வாழ்*
*மாநந் திபரா யணர்என் பவர்நின்*
*மைந்தற்கு உறுநோய்க் குமருந்து எனவே.*

அப்படிப் பரம்பொருளைப் போன்று ஆசீர்வாதம் நல்கிய அந்த

மாதவன் என்றைக்கும் அழிவில்லாத ஞானத்தை அருளக்கூடிய மகான் ஒருவர், சத்தீஸ்வரம் என்னும் இடத்தில் வாழ்கின்றார், அவர் பெயர் நந்திபராயணர். அவருடைய அருள் பார்வை உன்மகனுக்குக் கிட்டுமேயானால் குற்றநோய், பெருநோய் அனைத்தும் ஓடிவிடும்; உன்மைந்தர்க்கு அவருடைய உபதேசமே மருந்து.

*18.முடியா உபதேசம் இதுஎன்று அவனும்*
*முனிவன் பதம்எய் திமொழிந் தனன்இக்*
*கொடியான் வெருவா துகுயிற் றியநோய்*
*கூறற்கு அரிதா யகொடுந் தொழிலே.*

இந்த அருள் வார்த்தை கேட்ட சசிவன்னன் தந்தை பாகயஞ்ஞன் இந்த உபதேசம் முடிவில்லாத ஈஸ்வரன் வாக்கே என நம்பினான் அதன்படி நந்திபராயணரை அடைந்து முனிவருடைய பாதம் பணிந்து வணங்கி உரைத்தான். இங்கே நிற்கின்ற கொடிய நோயை உடைய கொடியவன் பலபல கொடூரங்களை, பாவங்களைச் செய்தவன்; அவற்றை உங்கள் திருச் சன்னதியில் உரைத்தற்கு இயலாத பாவங்களாகும்.

*19.ஈங்கு உன் திருமுன் பகரும்படியோ*
*இவன் எய் தியதீ வினைஎன் னஎலாம்*
*நீங்கும் படிதன் அனுபூ தியினால்*
*நிகழும் விழிவைத் தனன்நின் மலனே.*

முனிபுங்கவரே உம்முடைய மகாசன்னதியில் இவன் செய்த கொடூரங்களையோ பாவங்களையோ சொல்வதும் இவன் அடைந்த தீவினைகளையும் கொண்ட நோய்களையும் கூறுதல் முறை ஆகாது என்றான். மகாமுனிவர் தன்னுடைய கூர்மையான நயனங்களால் இவனை உற்று நோக்கி இவனுடைய பாவங்களும் நோய்களும் தன்னுடைய அனுபூதியினால் பார்த்தார்.

## கம்பர் அருளிய இராமகாதையில் குணச்சித்திரப் பாத்திரங்கள்

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

சிறுகதை, காவியம், இதிகாசம் என அனைத்திற்கும் சம்பவங்கள் அவற்றில் ஈடுபடுகின்ற, அவற்றாலே இன்ப துன்பங்களை அனுபவிக்கின்ற கதை மாந்தர்கள் மிக அவசியம். ஒருகதைக்கு, காப்பியத்திற்குப் பலதரப்பட்ட சம்பவங்களும் உணர்ச்சிகளும் அதற்கான கதை மாந்தர்களும் அவசியம்.

எந்தக் கதையோ, காப்பியமோ ஆனாலும் சொல்லப்படுகின்ற நிகழ்ச்சிகளுக்கு உரிய கதாபாத்திரங்கள் சேர்க்கப்பட வேண்டும். அவற்றில் தலையாய பாத்திரங்கள், கதாநாயகன், கதாநாயகி என்ற முக்கியப் பாத்திரங்கள் ஆகும். அடுத்ததாகக் கதை, காப்பியம் நகர்வதற்கு, நடத்துவதற்குத் தேவையான, ஆனால் அதிகம் பேசப்படாத விவரிக்கப்படாத பாத்திரங்கள் உள்ளன. இவை குணச்சித்திரப் பாத்திரங்கள், துணைப்பாத்திரங்கள் என்று அழைக்கப்படும். மூன்றாவதாக எந்தவிதமான முக்கியத்துவமும் தேவையும் இல்லாமல் நடமாடுகின்ற பாத்திரங்கள். இவை உதிரிப் பாத்திரங்கள் என்று அழைக்கப்படும்.

கம்பர் அருளிச் செய்த இராமகாதைக் காப்பியத்தில் நூற்றுக்கணக்கான கதாபாத்திரங்கள் சித்தரிக்கப்பட்டிருக்கிறார்கள். கதையின் நாயக, நாயகியாக ஸ்ரீஇராமபிரான், சீதாபிராட்டி சித்தரிக்கப்படுகிறார்கள். காப்பியத்திற்கு மிகத் தேவையான பாத்திரங்களாக, பேரரசன்தசரதன், மூன்று தாய்மார்கள், மூன்று சகோதரர்கள், இரண்டு குருமார்கள் ஆகியவர்களும் கதையினுடைய எதிர்மறைப் பாத்திரங்களாக இராவணனும், மந்தரை என்ற கூனியும் சித்தரிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் அனைவரும் காப்பியத் தேருக்கு அத்தியாவசியமான ஆரங்களாக விளங்குகிறார்கள். இவை தவிர, காப்பிய ஓட்டத்திற்கு மிகத் தேவையான குணச்சித்திரப் பாத்திரங்களாக அனுமன், சுக்ரீவன், வாலி, குகன், ஜடாயு, ஜாம்பவான், அங்கதன், கும்பகர்ணன், விபீஷணன், இந்திரஜித், மண்டோதரி, சூர்ப்பணகை, போன்றவர்கள் மிக அவசியமான குணச்சித்திரப் பாத்திரங்களாக உள்ளார்கள். டால்ஸ்டாய் எழுதிய

போரும் அமைதியும் .... என்ற காவியத்தில் 5000 பாத்திரங்களுடன் காப்பியம் பின்னப்பட்டிருப்பதாகச் சொல்வார்கள். மேற்கொண்டு உதிரிப்பாகங்களாக (திரை உலகில் துணை நடிகர்கள் போல) நூற்றுக்கணக்கானவர்கள் சேர்க்கப்பட்டுள்ளார்கள்.

நாம் மேலே குறிப்பிட்ட அனைத்து வகையான கதாபாத்திரங்களுக்குள்ளும் குணச்சித்திரப்பாத்திரம் என்று அறியப்பட்ட துணைப்பாத்திரங்கள் கதையினுடைய நகர்விற்கு மிக முக்கியமான பாத்திரமாக இருந்தாலும் கூட அதிக இடங்களில் பேசப்படாத குணச்சித்திரப் பாத்திரங்களை மட்டும், அதிலும் கதைக்கு மிக முக்கியத் தேவையான பாத்திரங்களைப் பற்றி மட்டும் சிந்திப்போமாக.

தாயார் மூவரில் சுமித்திரை எனும் தியாக அன்னை, பிள்ளைகள் நால்வரில் சத்துருகனன், மனைவி மார்களிலே இலக்குவன் மனைவி ஊர்மிளை, மிகுந்தகலைகள் அறிந்த குருமார்களில் மன்னராக இருந்து பிரம்ம ரிஷியாக உயர்ந்த விஷ்வாமித்திரர், தூதரில் அங்கதன் எனும் சீரிய இளைஞன், சேவகர்களிலே பக்திமிக்க ஜடாயு என்னும் கருடப் பறவைகளின் தலைவன், ஜாம்பவான் எனும் கரடிகளின் தலைவன், அனுமனை, சீதாபிராட்டியோ என்று ஐயம் கொள்ளச் செய்த கற்பின் செல்வி இராவணன் மனைவி மண்டோதரி ஆகிய பாத்திரங்கள் பற்றிச் சிந்திப்போமாக

### தியாக அன்னை சுமித்திரை

கம்பர் காவியத்தில் இடம் பெற்ற முக்கியமான குணச்சித்திரப் பாத்திரங்களுள் சுமித்திரை தலையானவள்.

சுமித்திரை தசரத சக்ரவர்த்தியின் மூன்றாவது ராஜமகிஷியாக மணந்து கொள்ளப்பட்டவர். இவருடைய பாத்திரம் மிகக் குறைந்த அளவிலும், காட்சிகளிலும் இடம் பெற்று உள்ளது. ஆனால் இவர் மூன்று மனைவியருள்ளும் மிகச் சிறந்த தியாக அன்னையாகத் திகழ்கிறார்.

திருஅவதாரப்படலத்திலே கலைக்கோட்டு முனிவர் புத்திரகாமயாகம் உட்பட அனைத்து வேள்விகளையும் நெறிமுறை தவறாவண்ணம் நிகழ்த்தி வேள்வியினுடைய பிரசாதமாகப் பிண்டத்தைக் கொடுத்து

“தசரதரே இந்தப் பிண்டத்தை உன்னுடைய மனைவியர் மூவருக்கும் முறைப்படி பகிர்ந்து அளிக்க” என்னும் போது

“உய்த்தநல் அமிர்தினை, உரிய மாதர்கட்கு,
அத்தகு மரபினால், அளித்தியால்”, என்றான்.

கலைக்கோட்டு முனிவர் அறிவுறுத்திய வண்ணம் தசரதன் மூத்த மனைவியான கௌசலைக்கு ஓர் பகுதியை அளித்தான்.

“காமர் ஒண் கௌசலை கரத்தில், ஓர்பகிர்
தாம்உற அளித்தனன் சங்கம் ஆர்த்து எழ”.

கோசலை தட்சிணகோசலநாட்டு அரசனுடைய மகளாவாள். மூன்று பேரில் மூத்தவள் கோசலை. எனவே முதலில் பிண்டத்தின் ஒரு பகுதியைத் தசரதன் பகிர்ந்து அளித்தான்.

அடுத்ததாக, கேகய நாட்டின் மன்னன் மகளாகிய கைகேயிக்கு ஒரு பகுதியைப் பகிர்ந்து அளித்தான். அடுத்ததாக மூவரில் இளையவளான சுமித்திரைக்கு ஒரு பகுதியைக் கொடுத்தான். கொடுத்த பின்னரும் பிண்டத்தின் சிறுபகுதி மிஞ்சியதால் சுமித்திரைக்கு மீண்டும் எஞ்சிய பகுதியை அளித்தான்.

இதில் முதல் இருவருக்கும் பிண்டங்களைப் பகிர்ந்து கொடுக்கின்ற போது தேவர்கள், கந்தர்வர்கள் முதலியோர் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர் என்று கம்பர் குறிப்பிடுகிறார். சுமித்திரைக்குப் பிண்டத்தின் இரு பகுதிகள் அளிக்கப்பட்ட பொழுது தேவேந்திரனும் மற்றும் இந்திரலோகத் தேவர்களும் ஆரவாரம் செய்தனர் என்பது கம்பர் வாக்கு.

சுமித்திரைக்கு அளித்தனன்; சுரர்க்கு வேந்து, “இனிச்
சமித்தது என்பகை” எனத் தமரொடு ஆர்ப்பவே.

பிண்டத்தின் இரு பகுதிகளைப் பெற்றுக் கொண்ட ராஜமகரிஷி சுமித்திரைக்கு இரண்டு மகன்கள் - இலட்சுமணன், சத்ருகன் பிறப்பார்கள். இந்திரலோகத்தைப் போரிட்டு அழித்து இந்திரன், இந்திராணி, தேவர்கள் அனைவரையும் விரட்டிய மாவீரன் இந்திரஜித் இராவணனுக்கும் மண்டோதரிக்கும் பிறந்த மூத்த மகன் ஆவான். மகாவீரனான லெட்சுமணன் மூலம் இந்திரஜித் வீரமரணம் அடைந்தான். இதை முன்னரே தெரிந்த இந்திரன்

“இனி சமித்தது என்பகை” என்றான்.

கலைக்கோட்டு முனிவரின் ஆசியாலும் அருளாலும், தேவர்களின் கருணையாலும் மூன்று மனைவியரும் கருவுற்றனர். மூன்று மனைவியருக்கும் உரிய காலத்திலே ஆண்குழந்தைகள் பிறந்தன.

கௌசல்யா புனர்பூச நட்சத்திரத்தில் கடகராசியில் விண்ணுலகோர் மண்ணுலகோர் புகழ இராமனை ஈன்றாள்.

"கருமுகில் கொழுந்து எழில் காட்டும் சோதியை,

திருஉறப் பயந்தனள் திறம்கொள் கோசலை."

அடுத்ததாக, பூசநட்சத்திரம் கடக ராசியோடு கூடிய சுபயோக சுபதினத்தில் பரதனை ஈன்றாள், கைகேயி.
அடுத்ததாக ஆயில்ய நட்சத்திரத்துடன் கூடிய சுபயோக சுபதினத்தில் இலக்குவனைப் பெற்றெடுத்தாள், சுமித்திரை.

"இளையவன் பயந்தனள் இளைய மென்கொடி"

அடுத்தும் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள் சுமித்திரை. பிண்டத்தில் இரு பகுதிகளைப் பெற்று, கலைக்கோட்டு முனிவனுடைய அருளாசியினாலும் இந்திரன் தேவர்களின் கருணையாலும் இரண்டு குழந்தைகள் பெற்றவள் சுமித்திரை. மகநட்சத்திரமும் சிம்ம லக்னமும் கூடிய சுபயோக சுபதினத்தில் சத்ருகனைச் சுமித்திரை ஈன்றெடுத்தாள்.

பிறந்த நாளிலிருந்து இராமனும் இலக்குவனும் ஒன்றாகவே இருந்தனர். கற்பதில், விளையாடுவதில், கலையில், போர்த்திறம் கற்பதில் சேர்ந்தே இருந்தனர்.

"ஐயனும் இளவலும் அணிநில மகள்தன்"

செய்தவம் உடைமைகள் தெரிதர, நதியும்" என்னும் படியாகக் கரியதிருமால் இராமனும் இளவல் இலக்குவனும் சேர்ந்தே இருந்தார்கள். அதேபோல பரதனும் சத்ருகனும் இணைந்தே இருந்தார்கள்.

"பரதனும் இளவலும் ஒருநொடி பகிரா(து)"

இவ்வண்ணம் தான் பெற்றமக்கள் இருவரையும் மூத்தவர்களாகிய இராமர், பரதர் இருவருக்கும் மெய்க்காவலர்களாக இணைபிரியாத் தொண்டர்களாக அர்ப்பணித்து மகிழ்ந்தவள் சுமித்திரை.

தாயார் மூவரில் கௌசல்யாதேவிக்கு இயற்கையாக இராமன் மூத்தமகனாக அமைந்ததால் இராமன் பட்டாபிஷேகத்திற்கு மனதார மகிழ்ந்து வாழ்த்தினாள். அதே சமயம் மந்தரையின் தீயசொற்களாலும் தீவினைப் பயனாலும் பரதனுக்கு அரசுரிமை வழங்கினாள் கைகேயி. ஆனால் எந்நிலையிலும் தன் மக்கள் உயர்நிலை அடையவும் பதவிகள் பெறவும் தாயான சுமித்திரை ஆசைப்படவில்லை. இருவரும் சேவகர்களாகவே வாழ்ந்து, அண்ணன்மார்களுக்குப் பணிவிடை செய்வதில் முழு மனநிறைவும் மகிழ்ச்சியும் பெற்றார்கள். அவர்களுடைய தாயான சுமித்திரை இருவரையும் தொண்டர்களாகவே செயல்படும்படி வலியுறுத்தினாள்.

இந்த மேன்மையான குணத்தை அயோத்தியா காண்டத்தில் நகர் நீங்கு படலத்தில் அழுத்தமாகப் புலப்படுத்துகிறார் கம்பர். இராமன் காடேகவும், பரதன் நாடாளவும் வேண்டும் என்ற கைகேயியின் ஆணையைக் கேட்ட இலக்குவன் வெகுண்டு எழுந்து பூநிலமதிரச் சினந்து கைகேயி, பரதனைக் கொல்வேன் என்று புறப்பட, அண்ணல் இராமர் அவனைச் சமாதானச்படுத்தி "இது விதியால் விளைந்தது என்று கூறி அமைதிப்படுத்தினார்." அதன் பின்னர் இருவரும் சுமித்திரையைக் காணச் சென்றார்கள்.

சுமித்திரை நடந்தவற்றை அறிந்து துயருற்ற போதும் இராமனுக்கு ஆசி கூறி வாழ்த்தினார். அந்த நேரத்தில் கைகேயி அன்னையின் தாதிப் பெண்கள் இராமன் அணிய வேண்டிய மரவுரிகளைக் கொண்டுவந்து அளித்தார்கள். அப்பொழுது இளவல் இலக்குவன் தானும் அண்ணனோடு கானகம் செல்வேன் என்று தாயிடம் வேண்டி அவனும் மரவுரிகளை வாங்கிக் கொண்டான்.

உடனே சுமித்திரை "நன்று, நீயும் கானகம் சென்று அண்ணனுக்குத் தொண்டு செய்வாயாக. இவன் தம்பி என்ற முறையில் செல்லாமல், இராமனின் அடியவன், தொண்டன் என்ற கருத்தில் செல்வாயாக!". என்றாள்.

'ஆகாதது அன்றால் உனக்கு; அவ் வனம் இவ் அயோத்தி;
மாகாதல் இராமன் நம் மன்னவன்; வையம் ஈந்தும்
போகா உயிர்த் தாயர் நம் பூங்குழல் சீதை – என்றே
ஏகாய்; இனி, இவ்வயின் நிற்றலும் ஏதம்' என்றாள்

(ஏதம்-குற்றம்)

பின்னும் பகர்வாள், ‘மகனே!இவன்பின் செல்; தம்பி
என்னும்படி அன்று, அடியாரின் ஏவல் செய்தி;
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின், வா; அதுஅன்றேல்
முன்னம்முடி’ என்றனள், வார்விழி சோர நின்றாள்.

இவ்வாறாகத் தன் மகன் இலக்குவனை இராமனுக்குக் காவலனாக, தொண்டனாக அனுப்பிவைத்து அண்ணன் இராமனையும் அன்னை சீதையையும் இரவும் பகலும் காவல் செய்து 14 ஆண்டுகள் வனவாசம் செய்து இளவல் திரும்பினார். இதுபோன்ற தொண்டர் நாயகன் ஆன இலக்குவனைப் பெற்று இராமனுக்குத் தொண்டு செய்யவே அளித்தவர் சுமித்திரை என்னும் தியாக அன்னை.

மேலும் சுமித்திரை மூத்த பட்ட மகிஷி கௌசல்யாவுடன் தோழமை கொண்டு அவருக்கு ஆதரவாக இருந்து வந்துள்ளார். தசரதன் மயங்கிக் கிடக்கும் பொழுதும் இறந்துவிட்டதை அறிந்த பின்னரும் அழுது அரற்றிய கௌசல்யாவுக்கு ஆதரவாக அருகில் அமர்ந்து சமாதானப்படுத்தியிருக்கிறார்.

ஆரண்ய காண்டத்தில் இராமரைக் காணப் பரதன் புறப்பட்ட பொழுதும் கௌசல்யாவுடன் புறப்பட்டுச் சென்று துணையாக இருந்திருக்கிறார். எதிலும் தன்னை முன்னிறுத்திக் கொள்ளாது கௌசல்யா தேவியின் தோழியாகவே தன்னைக் காட்டிக் கொண்டிருக்கிறாள்.

இது போன்று தன்னலங் கருதாது தன்னை முன்னிலைப் படுத்தாது வாழ்ந்தவள். தனது புதல்வர்களையும் முன்னிலைப் படுத்தாது தொண்டர்களாகவே வளர்த்தவள்.

சுமித்திரையே தாயார் மூவரில் சிறந்த தியாகியாகித் திகழ்கிறாள்.



## திருவாசகம் காட்டும் ஆசிரியர்-மாணவர் உறவு

டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர், வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.

ஓர் நாட்டின் அறிவுச் செல்வங்களை உருவாக்குகின்ற மாபெரும் பணியினை ஆசிரியர்கள் செய்கிறார்கள். மாணவர்கள் நாட்டின் அறிவுச்செல்வங்கள்.மாணவர்கள் நாட்டின் சொத்துகளாகக் கருதப்படுகிறார்கள்.சொத்துக்களை உருவாக்குகின்ற சொத்துக்களாக ஆசிரியர்கள் இருக்கின்றார்கள்.ஆசிரியர்களின் பணி மகத்தானது. எழுத்தறிவித்தவன் இறைவன் என்கிற உன்னதப் பெருமை ஆசிரியர்க்கு உண்டு. இத்தகு பெருமைமிகு ஆசிரியர் போற்றத்தக்க தகுதிகளையும் அனுபவங்களையும் கொண்டிருக்க வேண்டும். கடமையை முன்நிறுத்தி, தன்னைப் பின்நிறுத்திக் கடமை மீது கவனம் கொண்டவராக ஆசிரியர் இருக்க வேண்டும். பலனை எதிர்பார்த்துக் கடமை ஆற்றுபவராக இருக்கக்கூடாது. **பகவத்கீதை இரண்டாவது அத்தியாயம், ஸாங்கிய யோகம் (சுலோகம் 47) பகவான் கிருஷ்ணன் அர்ச்சுனனைப் பார்த்து**

**"வினையாற்றக் கடமைப்பட்டுள்ளாய்**
**வினைப்பயனில் ஒருபோதும் உரிமை பாராட்டாதே**
**வினைப்பயன் விளைவிப்பான் ஆய்விடாதே**
**வெறுமனே இருப்பதில் விருப்புக் கொள்ளாதே"**

எனக் கடமையின் சிறப்பினைத் தெரிவிக்கின்றார். **(ஸ்ரீமத் பகவத்கீதை, ஸ்ரீ ராம கிருஷ்ண தபோவனம், திருச்சி பக்கம்-143)**

பகவத்கீதையில் சொல்லப்பட்டுள்ள இவ்வரிகள் ஆசிரியர்களுக்கு முழுதும் பொருந்தும். ஆசிரியர் தமது கடமையினைச் சிறப்பாகச் செய்யவேண்டும். அதன் பலனில் எவ்வித உரிமையும் கோர வேண்டியதில்லை. கடமையின் விளைவில் எவ்வித உரிமையும் இல்லையென்று எண்ணி, கடமையாற்றாது வெறுமனே இருந்துவிடக்கூடாது.

ஆசிரியர்-மாணவர் உறவினை விளக்குவதில் திருவாசகம் தலைசிறந்த படைப்பாக இருக்கின்றது. இப்படைப்பில் ஆசிரியர் இறைவனாகவும் மாணவன் பக்தனாகவும் (அடியார்)

பார்க்கப்படுகின்றார்கள். ஒவ்வொரு ஆசிரியரும் திருவாசகம் பயில முன்வரலாம். ஆசிரியரின் கற்பிக்கும் திறன் உயர்வதற்கு இந்நூல் உதவக்கூடும். கற்றல் என்கிற கோட்பாடு ஆசிரியர் மீது மரியாதையையும் பக்தியினையும் உருவாக்க வேண்டும். பயத்தை உருவாக்கக் கூடாது. ஆசிரியரின் கருணை தோய்ந்த ஞானஒளி, ஒவ்வொரு மாணவரும் தமது திறமையைத் தானே அறியும் வண்ணம், மாணவர்களை மேம்படுத்தும். மாணவர்களின் மனத்துள் உள்ள இருளைப் போக்கும். நம்பிக்கையைத் தரும். மாணவர்கள் மனதிலே ஏற்கனவே பொதிந்திருக்கின்ற நல்ல பண்புகளையும், நல்ல திறமைகளையும் வெளிக்கொணர்வது கல்வி. அத்தகு கல்வியின் பயனாக மாணவர்கள் தமது சொந்தக்காலில் நின்று வாழ்க்கையில் பயணிக்க வேண்டுமென விவேகானந்தர் வலியுறுத்தியுள்ளார்.

மாணிக்கவாசகர் பாண்டிய மன்னன் அரிமர்த்தன பாண்டியன் அரசவையிலே அமைச்சராகப் பணியாற்றினார். இறைவனால் ஆட்கொள்ளப்பட்டுத் திருவாசகம் படைத்தார். அமைச்சராக மட்டும் இருந்திருந்தால்,மாணிக்கவாசகர் இந்த உலகிற்கு அறிமுகமாகி இருக்கமாட்டார். இறைவன் மாணிக்கவாசகர் மனதிலே பொதிந்திருந்த சிவநெறியை அறிந்து ஆட்கொண்டு அருளி, அமைச்சராக மட்டும் வாழப்பிறக்கவில்லை என்பதை உணர்த்தி, திருவாசகம் படைக்கச்செய்து, உலகம் போற்றும் சிவநெறி ஞானியாக மாணிக்கவாசகரை உயர்த்தினார். ஓர் அமைச்சரின் உள்ளம் புகுந்து, பொதிந்திருக்கும் நற்பண்புகளை அறிந்து உலகம்போற்றும் ஆன்மீக சோதியாக, சிவநெறிச்சோதியாக மாணிக்கவாசகரை இறைவன் உயர்த்தினார்.

இது போலவே ஒவ்வொரு ஆசிரியரும், தமது மாணவர்களின் நற்பண்புகளையும் திறமைகளையும் அறிந்து, அதனை அவர்கள் அறியும் வண்ணம் உதவி, மாணவர்களை தனக்கும் தன்னைச் சார்ந்தோர்க்கும்,நாட்டிற்கும் பயன்படும் வகையில் வாழ மேம்படுத்த வேண்டும். அறிவினையும் அனுபவத்தையும் ஒழுக்கநெறியோடு மாணவர்கள் பெற வேண்டும். உன்னதமான ஆசிரியர்-மாணவர் உறவு குறித்து, திருவாசகப் பாடல் மூலம் நாம் அறிய முற்படலாம்.

**இருகை யானையை ஒத்திருந்து என்உளக்**
**கருவை யான்கண்டிலேன் கண்டது எவ்வமே**
**வருகஎன்று பணித்தனை வானுளோர்க்**
**கொருவனே கிற்றிலேன் கிற்பன் உண்ணவே.**

எனது உள்ளக்கருவை (ஆன்மீக நெறியை, சிவநெறியை, திருவாசகம் படைக்கும் ஆற்றலை) நான் அறியாது இருகை கொண்ட யானையாக மாணிக்கவாசகன் இருந்தேன். எனது உள்ளக்கருவை நீ எவ்வாறு அறிந்து கொண்டாய் என மாணிக்கவாசகர் இறைவனிடம் கேட்கிறார். எனது உள்ளக்கருவை அறிந்து, வருக என்று என்னைப்பணித்து, ஆட்கொண்டாய்.உன்திருவடி சரணடைய உன்னைத் தேடுகிறேன். கிடைக்காதிருக்கின்றேன் என மாணிக்கவாசகர் தமது பாடலில் குறிப்பிடுகிறார்.

நமது உள்ளத்தில் பொதிந்துள்ள திறமைகளையும் நல்ல பண்புகளையும் நாம் அறிந்துகொள்ளவில்லையெனில், இரண்டுகை கொண்ட யானையாகக் கருதப்படுவோம். நாம் நம்மை அறிகின்ற போது மனிதராகிறோம். நான் யார் என்று எனக்கு அறிமுகப்படுத்திய ஆசிரியர் போற்றப்படுகிறார். நான் வணங்கும் இறைவனாகக் காட்சி தருகிறார். திருவாசக வரிகளின்படி ஒவ்வொரு ஆசிரியரும் மாணவர்களின் வாழ்வுசார் திறமைகளை ஊக்குவிக்க வேண்டும். ஆசிரியர்க்குத் தேவையான உயர்வான ஆற்றலை இந்தத் திருவாசகப்பாடல் நமக்குக் காட்டுகின்றது.

அனைத்துப் பாடங்களை முடிக்க வேண்டுமென அவசரமாகச் செயல்படுதல், தேர்வுகளுக்கு மாணவர்களைத் தயார்ப் படுத்துதல், தேர்வுகளை நடத்தி மதிப்பீடு செய்தல், சுருக்கவிளக்கக் கையேடு தருதல், வருகைப் பதிவேடு பராமரித்தல் ஆகியவற்றோடு ஆசிரியரின் பணி முடிந்துவிடுவதில்லை. அது ஆசிரியரின் ஐம்பது சதவிகிதப் பணிக்குள் அடங்கும். மீதமுள்ள ஐம்பது சதவிகிதப்பணி என்பது மாணவர்கள் மனதிலே நீறுபூத்த நெருப்புப் போலப் பொதிந்துள்ள திறமைகளை அறிந்து அவற்றை மாணவர்களுக்கு உணர்த்தி ஊக்குவிப்பதாகும். இத்தகு ஆசிரியர் போற்றி வணங்கப்படுவார்.

பால்நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியேனுடைய
ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தம்ஆய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே! சிவபெருமானே!
யான்உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கு எழுந்து அருளுவது இனியே?

ஒரு தாய் தனது குழந்தையின் மீது செலுத்தும் கவனத்தை விட, ஓர் ஆசிரியர் தனது மாணவன் மீது அதிகக் கவனம் செலுத்த வேண்டும்.மாணவன் படிப்பு, பண்பாடு, ஒழுக்கம் ஆகியவற்றில் செம்மாந்து நிற்பதற்கு ஆசிரியர் பெரும்பங்காற்ற வேண்டும். ஆசிரியர் தாயினும் சாலப் பரிந்து நிற்க வேண்டும்; மாணவனது உள்ளத்தில் இருக்கும் அறியாமை என்னும் இருளைப் போக்கி, தேடி அறிதல், புரிந்து கொள்ளல், உணர்தல் என்கிற ஒளியினை, அறிவொளியினை ஏற்ற வேண்டும். உடல் வளர்க்கும் சிந்தையிலிருந்து விலகி, மெய்ஞ்ஞானம் பெருக்கும் சிந்தையில் மாணவனை ஊக்குவிக்க வேண்டும். ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்க வேண்டும். ஆனந்தமாய தேனினைச் சொரிந்து என்பது நிரந்தர, இனிமையான, ஆனந்தமான நல்வாழ்விற்கு நல்வழி காட்டுதலாகும். இப்பொறுப்பு ஆசிரியரைச் சார்ந்தது. மாணவர்கள் தம் நல்வாழ்வில் ஆசிரியரின் சேவையை நினைத்துப் பார்க்கும் அளவிற்கு ஆசிரியர் உழைத்திருக்க வேண்டும். புறம் புறம் திரிந்த என்பதற்கு நாற்புறமும் இறைவன் இருந்து அடியார்களை ஆட்கொள்வது போல, மாணவர்களின் படிப்பைச் சார்ந்த, நல்வாழ்வு சார்ந்த வளர்ச்சிக்கென நாலாபக்கங்களிலும் ஆசிரியரது உழைப்பு இருக்க வேண்டும். இத்தகு ஆசிரியர் இறைவனுக்கு ஒப்பாவார். தாயின் பரிவை விட இறைவனின் பரிவு மாணிக்கவாசகருக்கு உயர்வாக இருந்துள்ளது. வீட்டு அறையை விட, வகுப்பறை மாணவனுக்கு உயர்வாக இருக்க வேண்டும். ஆசிரியரது ஞானஒளியில் மாணவன் தன்னை அறிந்து அறிவொளி பெற வேண்டும். ஆசிரியப்பணி அறப்பணி என்பதற்கு இதுவே சான்றாக உள்ளது.

## எண் ஒன்பதின் கூட்டல், பெருக்கல் சித்தாந்தம்

சித்தாந்த ரத்தினம், பா. அசோக்குமார், மதிப்பியல் தலைவர்,
சித்தாந்த சைவநெறி மன்றம், திருப்பாதிரிப்புலியூர், கடலூர்.

ஒன்று முதல் ஒன்பது வரையிலான ஒற்றை இலக்க எண்களே மற்ற எண்களுக்கு ஆதாரம். அவற்றுள் ஒன்பது என்கிற எண் தனிச் சிறப்புடைத்தாகும். மற்ற எண்களெல்லாம் வேறுவேறு எண்களுடன் கூட்டும்பொழுது, பெருக்கும் பொழுதோ வருகின்ற கூட்டுத்தொகை எண்ணைப் பிரித்து ஒற்றை இலக்க எண்ணாகக் கூட்டினால் வரும் எண் ஒவ்வொரு விதமாகக் காட்டும்.

ஆனால் ஒன்பது மட்டும் தன்னோடு கூட்ட வந்த எண்ணால் அமையும் கூட்டுத்தொகையை ஒற்றை இலக்க எண்ணாகப் பிரித்துக்கூட்ட, எந்த எண் ஒன்பதுடன் கூட்டப்பட்டதோ அதே எண்ணே வரும்.

எடுத்துக்காட்டாக, 9+1=10, இந்த 10ஐ ஒற்றை இலக்க எண்ணாகப் பிரித்துக்கூட்ட, 1+0=1 என 1 மட்டுமே அமையும் (பூஜ்யத்திற்கு மதிப்பில்லை) இவ்வாறே 9+2=11, இந்த 11ஐ 1+1 எனப் பிரித்துக் கூட்ட 2 என வரும். இதுபோல் 1 முதல் 10 வரை எண்களைக் கூட்டிக் கூட்டிட, கூட்டப்பட்ட எண்ணே வரும்.

ஆனால் பத்துக்கு மேற்பட்ட எண்களை இதுபோல் கூட்டினால் கூட்டப்பட்ட எண்ணானது வராது. எடுத்துக்காட்டாக 9+11=20, இந்த 20ஐ 2+0 என்று மேலும் பிரித்துக் கூட்டிட 2 மட்டுமே வரும், கூட்டப்பட்ட எண்ணான 11 வராது. எனவே, இது ஒன்று முதல் பத்து வரையிலான எண்ணுக்கே பொருந்தும். இங்ஙனம் அமைவதை அடுத்தது காட்டும் பளிங்குபோல் (706) என்கிற குறளோடு பொருத்தி ஒப்பிடலாம். இங்ஙனம் உணர்வதில் ஒரு தத்துவம் உள்ளது.

கண்ணாடியில் காணும் எந்தப் பொருளும் இடது வலதாக, வலது இடதாகவே மாறி இடவல மாற்றத்தோடுதான் தோன்றும். இம்மாற்றத்தினை மாற்றி, உள்ளதை உள்ளவாறே அறிந்திட எதிர் எதிராக வைக்கப்படும் கண்ணாடிகளில் தோன்றும் உருவ மாற்றத்தால் சரியானதை அறியலாம்.

இறைநிலை என்பதும் ஆண் பெண்ணான கூட்டுநிலை என்பதும் சித்தாந்த உணர்வு. ஆணொடு பெண் என்ற நிலையில் இரண்டான பிரிப்பு போலத் தெரியினும் அர்த்தநாரியாக ஒன்றாகவே உணர்தல்தான் உண்மை.

இப்பேருண்மையை நிலையான ஒன்பதுடன் கூடும் ஒன்று முதல் பத்து வரையிலான கூட்டுத்தொகையைக் கூட்ட அதே எண்களாக நிற்பதான பொருத்தத்தை அர்த்தநாரி தத்துவத்தோடு ஒரோ வழி உணர்ந்து தெளிவது சைவ சித்தாந்தத்தின் ஒரு குறிப்பு எனலாம்.

மேலும் நிலை எண்ணான ஒன்பதைச் சிவம் எனக் கொண்டால் கூட்டப்படும் எண்ணைச் சக்தியாக உணர்வதிலும் ஒரு தத்துவம் உண்டு. நிலையான சிவத்திற்குப் புராணப்படி பிறப்பு கூறப்படுவதில்லை. சிவன் பிறவா யாக்கைப் பெரியோன் என இளங்கோ அடிகள் கூறுவார். பாலனாய் வளர்ந்திலாப் பான்மையான் என அப்பர் பெருமான் திருவாரூர்த் திருத்தாண்டகத்தில் கூறுவார். ஆனால் சக்திக்கான அவதாரங்கள் பலவாகக் கூறப்படுவதுண்டு. எனினும் சக்தியாய் சிவமாய் ஒன்றிருத்தலே உண்மை. இந்நிலையில்தான் ஒன்பது என்றது நிலையாய் மாறாமல் நிற்க அந்த எண்ணுடன் சேரும் ஒன்று முதல் பத்து வரையிலான எண்கள் மாற்றத்திற்கு உட்பட்டு ஒருநிலைபேற்றை அடைவதைச் சித்தாந்தப் பொருத்தமாகவே உணரலாம்.

அடுத்து ஒன்பது என்ற எண்ணுடன் பிற எண்களைப் பெருக்க வரும் கூட்டுத்தொகையை ஒற்றை இலக்க எண்ணாகப் பிரித்துக்கூட்ட அது ஒன்பதாகவே வரும் வியப்பைக் காண்போமாக.

9×2=18 இந்த 18ஐ 1+8 எனக்கூட்ட ஒன்பதே வரும் 9×45=405 இந்த 405ஐ 4+0+5 எனக் கூட்ட ஒன்பதே வரும். இவ்வாறே எந்தப் பிற எண்ணாலும் பெருக்கினாலும் இறுதியாக ஒன்பதே வரும்.

இது செம்மண் பூமியில் மழை பெய்யும் போது மழைநீர் செந்நிறம் பெறுவதைப் போல ஒன்பது என்ற எண்ணால் தன்னைப் பெருக்க வரும் எண்ணைத் தன்னைப் போலவே மாற்றி விடுவதாக

ஒப்பிட்டுரைக்கலாம். இதனைச் செம்புலப் பெயல்நீர் போல அன்புடை நெஞ்சம்தாம் கலந்தனவே என்ற சங்கப் பாடலைப் போன்றதாக உணரலாம். இதிலும் ஒரு தத்துவ உள்ளடக்கம் உள்ளதைச் சித்தாந்தத்தோடு உணரலாம்.

இறைவன் தன்னிலையில் தானாய் இருந்து தன்னுடன் சேரும் ஆன்மாவைப் பக்குவப்படுத்தி ஆட்கொள்ளும் சைவ சித்தாந்தக் கருத்தை ஒன்பதுடன் பெருக்கிக் காணும் எண்ணால் அமையும் கூட்டுத்தொகையைப் பிரித்துக் கூட்ட அதே ஒன்பது வருவதைப் பொருத்தி உணரலாம். இதனைச் சிவத்துடன் ஜீவன் ஒன்றாதலான ஐக்கியமாக உணரலாம். அத்வைதம் என்றாலும் தகும்.

ஒன்பதான சிவன் ஒருவனே. அவனுடன் இணையும் ஆன்மாக்கள் பலப்பலவாம் என்பதை உணர்த்தும் விதமாகவே பெருக்கலுக்குரிய எண் என்பதனைப் போல இலக்கமானாலும் அதனால் அமையும் கூட்டுத்தொகையைப் பிரித்துக் கூட்ட இறுதியில் வருவது ஒன்பது தான்.

இப்படியாக இறைவனுடன், ஆன்மா இணையும் நிலைகளின் கூடுதலும் ஐக்கியமுமான கருத்தை ஒன்பது என்ற எண்ணுடன் பொருத்திப் பார்க்கும் போதுதான் நம் முன்னோர்கள் கண்டறிந்து உணர்த்திய எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும் என்ற உண்மையை உணர முடிகிறது.

## பாவேந்தனுக்குள் பைந்தமிழ்

ச.முல்லைக்கொடி
தமிழ்த்துறைஉதவிப்பேராசிரியர்,
நாச்சியப்பசுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

கவிஞன் என்பவன் கற்பனையும் நடைமுறையும் கலந்து தருபவன். நிழல்களுக்கு நிஜமூட்டி நிஜங்களுக்கு நிலைப்பூட்டுபவன். சொற்சித்திரங்களைப் படைப்புகளாக்கி, மொழியைப் பாங்குறச் செய்பவன். இவ்வரிய பணி செய்யும் கவிஞர்களின் வரிசையில் காலத்தை வென்று வாழும் பைந்தமிழ்க் கவிஞனே பாரதிதாசன்.

மொழியை அணி செய்யும் படைப்புகள் தந்து தன் ஆளுமையைச் சமுதாய மேன்மைக்கு இட்டுச் சென்றவர். இவரின் புரட்சிக் கருத்துகள் பொதுவுடைமை மலர வைத்தன. சமத்துவம் விதைத்த இவருடைய சிந்தனைகள் மூடத்தனத்தை மூழ்கச் செய்து ஒற்றுமை உணர்வை

முகிழ்க்கச் செய்தன. இக்கருத்தைப் பாவேந்தர்,

*பிரிவிலை எங்கும் பேதமில்லை*
*உலகம் உண்ண உண் உடுத்த உடுப்பாய்*

என்னும் அடிகளில் பதிப்பிக்கிறார். இக்கவிஞன் காணும் பொதுவுடைமைச் சமுதாயத்தில் வறுமையாளர்கள் எவருமில்லை; பிறருடைய நலத்தை தன்னுடையதாக்கும் பேதைமைப் போக்குமில்லை. இப்படி நற்குணம் மிக்க மக்களே நிறைந்த புதுமையுலகைக்காண, கனவினில் திளைத்தவன். இதனை,

*எல்லார்க்கும் எல்லாம் என்றிருப்பதான*
*இடம் நோக்கி நடக்கின்ற திந்தவையம்*
*கல்லாரைக் காணுங்கால் கல்விநல்காக்*
*கசடர்க்கு அங்கே தூக்கு மரம் உண்டாம்*

என எச்சரிக்கிறான்.

பாடலடிகளில் பாவேந்தன் ஏற்றமிகு சமுதாயத்தை எழிலாக்க முனைகிறான். கொள்கைகளை, எண்ணச் சித்திரங்களாக்கி வரைந்த படைப்புக் கலைஞன் பாரதிதாசன். ஏடுகளும் இவர் கவிதை தாங்கி எழுச்சி பெறும்.

*இல்லாரும் அங்கில்லை பிறன் நலத்தை*
*எனதென்று தனியொருவன் சொல்லான் அங்கே*
*நல்லாரே எல்லாரும் அவ்வையத்தில்*
*நமக்கென்ன கிழியட்டும் பழம் பஞ்சாங்கம்*

என்று புரட்சி பாடிய புதுமைக் கவிஞன். மூடநம்பிக்கைகளுக்கு முற்றுப்புள்ளி வைத்து முன்னேற்றப்படிகளை எழுப்பித்தவன். பைந்தமிழைத் தன்னுயிராய் மதித்துப் போற்றிய பாரதிதாசன் தன் குருவாம் பாரதியைக் கொண்டாடும் இடத்தில் கூடக் கொள்கைகளைப் பரப்பி மகிழ்ந்தவன்.

*நீடுதுயில் நீக்கப்பாடி வந்த நிலா*
*படரும் சாதிப்படைக்கு மருந்து*
*மண்டும் மதங்கள் அண்டா நெருப்பவன்*

எனப் பாரதியைப் போற்றும் இடத்தில் கூட மாசற்ற சமுதாயம் மலர நினைக்கிறான்.

கற்பனைக்குள் மூழ்கி இலக்கிய முத்தெடுப்பது மட்டும் கவிஞனின் வேலையன்று. நடைமுறையின் நாடித்துடிப்பை அளந்தறிந்து வழிப்படுத்துவதும் அவசியம். அப்போதுதான் ஒரு படைப்பாளன் வாழ்வியலை வாசிக்க மட்டுமின்றிச் சுவாசிக்கவும் கற்றுக் கொடுக்க முடியும். இப்பணியைத் தீந்தமிழ் மொழியில் தீட்டிச் சிறந்தவன் புரட்சிக்கவிஞன்.

சாதி மத பேதமற்ற சமத்துவம், ஆண் பெண் சரிநிகர் என்னும் சமதர்மம், ஏற்றத்தாழ்வுகளை விரட்டியடிக்கும் பொதுவுடைமைத் தத்துவம் ஆகியவற்றை அருந்தமிழ் ஆயுதம் ஏந்தி அப்புறப்படுத்திய அமர கவி பாவேந்தன்.

*பெண்ணடிமை தீருமட்டும் பேசும் திருநாட்டு*
*மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே*

எனத் தன் ஆசிரியரின் வழி தரணியில் பெண்கள் தனித்துவம் மிக்கவர்கள், தகுந்த உரிமை தந்து உயர்த்த வேண்டும் என்று முழக்கமிட்டவன்.

ஆதிக்கப்போக்கிலிருந்து விடுவித்துச் சாதிக்கப்பிறந்தவள் பெண் என்பதைச் சமுதாயத்திற்கு அறிய வைத்த புரட்சியாளன்.

பிரம்மனும் அதிசயிக்கும் பெரும் படைப்பாளன் நம் புரட்சிக்கவிஞன். அழியாத சிந்தனைகளைக் கருவாக்கி அழகிய தமிழில் தந்த நவீன கலைஞன். இக்கவிஞனின் எண்ணங்களில் தமிழன்னை தவமிருக்கிறாள். அதனால்தான், தமிழுணர்ச்சி இல்லாதவர்களிடமும் தாய்மொழிப்பற்றை ஊட்டிச் செல்லும் படைப்புக் கவிஞனாய்ப் பரிணமிக்கிறான்.

கனியிடை ஏறிய சுளையும்-முற்றல்
கழையிடை ஏறிய சாறும்
இனியன என்பேன் எனினும்-தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்

என்று தம்முயிராய்த் தமிழைப் போற்றிய பாங்கும் கவிதைச் சிறப்பும் படிப்பவர்க்குள் பைந்தமிழ் உணர்வைப் பதிக்கின்றன. மோனையும் எதுகையும் முத்தமிழை முத்தாய்ப் பாக்குகின்றன.

உயிராய் உணர்வாய் மட்டும் உயர்தனிச் செம்மொழி தன்னுள் நிற்கவில்லை.பகுத்தறிவுப்பாதை போட்டு, தன்னை உணரும் அறிவாய் என்னுள்ளம் நிறைந்தது அன்னைத் தமிழே என ஆளுமைக் கவிஞன் அதிசயம் அடைகிறான்.

*பயிலுறும் அண்ணன்தம்பி-அக்கம்*
*பக்கத்துறவின் முறையார்*
*தயைமிகு உடையாள் அன்னை-என்னைச்*
*சந்ததம்மறவாத்தந்தை*
*குயில்போல் பேசிடும் மனையாள்-அன்பைக்*
*கொட்டிவளர்க்கும் பிள்ளை*
*அயலவராகும் வண்ணம்-தமிழ்என்*
*அறிவினில் உறைந்தது கண்டீர்*

என்னும் அடிகளில் உறைதல் என்ற சொல்லாட்சி தமிழின் மீது கவிஞன் கொண்ட ஆழ்ந்த பக்தியை வெளிப்படுத்துகிறது.

உறவினர்களை எல்லாம் அந்நியாராக்கித்தன் உள்ளத்தில் ஐக்கியமான அன்னைத்தமிழை நேசித்த மாண்பு நேர்த்தியானது.

கவிஞனானவன் கற்பனை உளி கொண்டு எண்ணங்களைச் செதுக்கி இலக்கியச் சிற்பத்தை எழுப்புபவன்.

அவன் படைக்கும் இலக்கிய உலகத்தில் நீலவானம், நிறைவெண்மதி, காலைக்கதிரவன், அலைதவழும் ஆழ்கடல், நேரிய உள்ளமாய் நிமிர்ந்து நிற்கும் மலை ஆகியவை அழகுற்று ஒளிர்கின்றன. இந்த இயற்கையின் அழகை மேலானதாக நினைக்கும் கவிஞர்கள் தமிழின் விந்தையை எழுத இயலாதவர்கள் என்கிறார். இயற்கையின் தன்மையைவிட இனிய தமிழே தண்மை நிறைந்தது எனப் போற்றும் பாவேந்தர்,

*நீலச்சுடர்மணிவானம்-ஆங்கே*
*மலைகளின் இன்பக்காட்சி*
*மேலெனை எழுதும் கவிஞர்-தமிழின்*
*விந்தையை எழுதத்தரமோ?*

என்று வினா எழுப்புகிறார். இந்த ஆளுமைக்கவிஞனின் படைப்புக்குள் அன்னையைவிட அன்னைத்தமிழே முதன்மை பெறுகிறாள்.

தமிழைப்பழித்தவனைத் தாய் தடுத்தாலும் விடேன்

எனும் போது தாய்மொழியைப் பழிப்பவர்களைப் பலிவாங்கக்

கூற்றுவனாக மாறவும் தயங்கவில்லை. இங்கு, பாவேந்தருக்குள் தமிழை நேசித்த தாய்மொழி உணர்வு வெளிப்பட்டு நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

இவ்விடத்தில் நீதியை நிலைநாட்டிய வள்ளுவமும் பக்தியை நிலைநிறுத்திய வாசகமும் என் நினைவுக்குள் வருகின்றன. ஈன்றவளின் பசித்துயர் கண்டவிடத்து வறுமையின் காரணமாகப் போக்க இயலவில்லை எனினும் சான்றோர் பழிக்கும் செயல்களைச் செய்யக்கூடாது என்கிறார் திருவள்ளுவர்.

*ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க*
*சான்றோர் பழிக்கும் வினை*

நெஞ்சத்தின் தெய்வமான அன்னையின் பசித்துயரைவிட நேர்மையைப் பற்றும் பண்புச் சிறப்பே பெரிதெனப் போற்றும் வள்ளுவரின் உள்ளம் விளக்கமடைகிறது.

பக்தியின் மொழி தமிழ் என்பர் சான்றோர். திருவாசகத்தைத் தேன் தமிழில் தந்த மாணிக்கவாசகரும் தாயன்பினும் இறைவன் தந்த தயை அருள் சிறந்ததென்கிறார்.

இதனை,

பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப்
பரிந்து நீ பாவியேனுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தம் ஆய

எனக்கூறுவதால் உணரப்படும். நேர்மை உணர்வுக்காகத் திருவள்ளுவரும் நெறிப்படுத்திய இறையருளுக்காக மாணிக்கவாசகரும் முதலிடம் கொடுத்து அடுத்த இடம் தாய்க்குத்தந்தனர்.

புரட்சிக்கவிஞனோ தன்னுயிர்த் தமிழுக்கு முதலிடம் தந்து உயிர்தந்த அன்னைக்கு அடுத்த இடம் அளித்ததைப் பாவேந்தன் அடிகள் உணர்த்துகின்றன. இதனால் பாவேந்தனுக்குள் பைந்தமிழ், அன்பைத் தந்த அன்னையினும் உயர்ந்து சிறந்ததை அறிய முடிகிறது.

புரட்சிக்கவிஞனின் படைப்புக்குள் தமிழன்னை பொதுவுடைமைப் புரட்சி செய்தாள்.

இனிமை சூடிய தொன்மைத் தமிழாய் இளமைகாத்தாள்; கவிஞனுக்குள் எழுந்த எண்ணங்களுக்கு வடிவம் தந்தாள்.

வாழும் தமிழாய் வளரும் தமிழராய்க் காலத்தை வென்று வாழும் புரட்சிக்கவிஞராய்ப் பல்லுருக்கொண்டு பரிணமிக்கிறாள் பைந்தமிழ்த்தாய். ஆனால்! பாவேந்தனுக்குள் தமிழொன்றே உயிராய் உறைந்துவிட்டது.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### பொச்சாவாமை

(சோர்வின்மை, மறவியின்மை)

1. **இறந்த வெகுளியின் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியின் சோர்வு.**

இறந்த - அளவற்ற; வெகுளியின் தீதே - சினத்தை விடவும் தீங்காகும்; சிறந்த உவகை மகிழ்ச்சியின் சோர்வு - மிகுந்த உவகையினாலும் மகிழ்ச்சியினாலும் வரும் மறவி;

மன்னனுக்கு மிகுந்த உவகையினாலும் மகிழ்ச்சியினாலும் வரும் மறவி என்பது அவனது அளவற்ற சினத்தைவிடவும் தீங்காகும்.

தீதே - தேற்றேகாரம்

2. **பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.**

பொச்சாப்புக் கொல்லும் புகழை - மறவி என்பது புகழைக் கெடுக்கும்; அறிவினை - ஒருவனுடைய அறிவை; நிச்சம் - நித்தமும்; நிரப்புக் கொன்றாங்கு - வறுமை கெடுப்பது போல.

ஒருவனுடைய அறிவை நித்தமும் அவனுடைய வறுமை கெடுப்பது போல மறவி என்பது அவனது புகழைக் கெடுக்கும்.

ஆங்கு - உவம உருபு.

3. **பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அதுஉலகத்து
எப்பால்நூ லோர்க்கும் துணிவு.**

பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை - மறவி உடையார்க்குப் புகமுடைமை இல்லை; அது - அந்த இன்மை; உலகத்து - உலகத்தில்; எப்பால் நூலோர்க்கும் துணிவு - எந்தவகை நூல் உடையார்க்கும் தெளிந்த கருத்தாகும்.

மறவி உடையார்க்குப் புகழுடைமை இல்லை என்பது இவ்வுலகத்தில் எந்தவகை நூல் உடையார்க்கும் தெளிந்த கருத்தாகும்.

புகழ்மை – பண்புப் பெயர்.

**4. அச்சம் உடையார்க்கு அரண் இல்லை ஆங்குஇல்லை**
**பொச்சாப்பு உடையார்க்கு நன்கு.**

அச்சம் உடையார்க்கு – அச்சம் கொண்டவர்களுக்கு; அரண் இல்லை – அரண் இருந்தாலும் பயனில்லை; ஆங்கு இல்லை – அதுபோல இல்லை; பொச்சாப்பு உடையார்க்கு நன்கு – மறவி உடையவர்க்கு எந்தப் பயனும் இல்லை.

அரண் இருந்தாலும் அச்சம் கொண்டவனுக்கு அதனால் பயனில்லை; அதுபோல எல்லாம் பெற்றிருந்தாலும் மறவி உடையவர்க்கு அவற்றால் எந்தப் பயனும் இல்லை.

ஆங்கு – உவம உருபு.

**5. முன்உறக் காவாது இழுக்கியான் தன்பிழை**
**பின்ஊறு இரங்கி விடும்.**

முன்உறக் காவாது – துன்பம் வரும்முன் அதனை அறிந்து காக்காமல்; இழுக்கியான் – மறந்து தவறியவன்; தன்பிழை – அவனது தவறு; பின் ஊறு – பின்னர்த் துன்பம் வரும் போது; இரங்கி விடும் – அதற்காக வருந்துவான்.

துன்பம் வரும் முன் அதனை அறிந்து காக்காமல் மறந்து தவறியவன் பின்னர்த் துன்பம் வரும் போது அவனது பிழைக்காக வருந்துவான்.

**6. இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை**
**வாயின் அஃது ஒப்பது இல்.**

இழுக்காமை யார்மாட்டும் – யாரிடத்தும் தவறாமல்; என்றும் வழுக்காமை – என்றைக்கும் மாறாமல்; வாயின் – வாய்த்தால்; அஃது ஒப்பது இல் – அதனைப் போன்ற தொரு நன்மை வேறு இல்லை.

யாரிடத்தும் என்றைக்கும் தவறாமலும் மாறாமலும் மறவாமை வாய்த்தால் அதனைப் போன்ற தொரு நன்மை வேறு இல்லை.

வாயின் – வினை எச்சம்.

**7. அரியஎன்று ஆகாத இல்லை பொச்சாவாக்**
**கருவியான் போற்றிச் செயின்.**

அரிய என்று ஆகாத இல்லை - செய்வதற்கரிய செயல் என்று முடியாதது எதுவும் இல்லை; பொச்சாவாக் கருவியான் - மறவாமை என்னும் கருவியால்; போற்றிச் செயின் - கருதிச் செயல்பட்டால்;

மறவாமை என்னும் கருவியால் கருதிச் செய்தால் செய்வதற்கரிய செயல் என்று ஆகாதது எதுவும் இல்லை.

பொச்சாவா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**8. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது**
**இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்.**

புகழ்ந்தவை போற்றி - புகழுக்குரிய செயல்களைக் கருத்தில் கொண்டு; செயல் வேண்டும் - செய்ய வேண்டும்; செய்யாது - அவற்றைச் செய்யாமல்; இகழ்ந்தார்க்கு - மறந்தவர்களுக்கு; எழுமையும் இல் - எழுமையிலும் நன்மை இல்லை.

மன்னன் புகழுக்குரிய செயல்களைக் கருத்தில் கொண்டு செய்ய வேண்டும்; அவ்வாறின்றி அவற்றை மறந்தவர்களுக்கு எழுமையிலும் நன்மை இல்லை.

**9. இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாம்தம்**
**மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.**

இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக - மறதியினால் அல்லது சோர்வினால் கெட்டவர்களை நினைக்க வேண்டும்; தாம் தம் - அரசன் தம்முடைய; மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து - மகிழ்ச்சியினால் வலிமை அடையும் பொழுது;

அரசன் தம்முடைய மகிழ்ச்சியினால் வலிமை அடையும் போது முன்னர் மறதியினால் கெட்டவர்களை நினைக்க வேண்டும்.

உள்ளுக - வியங்கோள் வினைமுற்று.

**10. உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றும்தான்**
**உள்ளியது உள்ளப் பெறின்.**

உள்ளியது எய்தல் எளிதுமன் - மன்னன் தான் நினைத்ததை அடைதல் எளிதாகும்; மற்றும் - பின்னும்; தான் உள்ளியது உள்ளப் பெறின் - தான் நினைத்ததை மறவாது நினைக்கப் பெற்றால்.

மன்னன் தான் நினைத்ததை மறவாமல் பின்னும் நினைப்பில் கொண்டால் அவன் நினைத்ததை அடைதல் எளிதாகும்.

மன் - ஒழியிசை.

*(தொடரும்...)*

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம்

தமிழாகரர் தெ.முருகசாமி, புதுச்சேரி
(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

திருவருள் கொழிக்கும் அருள்மிகு அன்னை திருநெல்லை வலம் உறை கோவிலூரின் நகரத்தார் ஆதீனம் பன்னிரண்டாம் குருமகா சந்நிதானம் சீர்வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகளும் மயிலம் – பொம்மபுர வீரசைவ ஆதீனப் பத்தொன்பதாம் குருமகா சந்நிதானம் சிவஞான பாலைய சுவாமிகளும் திருவதிகையில் நடந்ததோர் ஆன்மீக நிகழ்ச்சியில் கலந்து கொண்ட போது நாச்சியப்ப சுவாமிகள் நமது கோவிலூர் திருமடத்தில் நமக்கு உறுதுணையாக இருப்பவர் தங்கள் மயிலம் தமிழ்க் கல்லூரியில் படித்த மீனவன் என்று மயிலம் சுவாமிகளிடம் பெருமையாகக் கூறினார்களாம்.

அதற்கு மயிலம் சுவாமிகள் செட்டி நாட்டுப் பிள்ளைகள் என்றாலே எங்கள் திருமடத்திலும் கல்லூரியிலும் தனியான மதிப்புண்டு என்றார்களாம்.

இந்த அரிய உரைப்பரி மாற்றத்தை மீனவரிடம் நாச்சியப்ப சுவாமிகள் கூறியதாகக் காப்பியக் கவிஞர் மீனவர் என்னிடம் ஒருமுறை கூறினார். மயிலத்தின் நான்காண்டுப் புலவர்படிப்பில் நான் அவருக்குப் பிந்திய இரண்டாண்டு வகுப்பில் ஒரே காலத்தில் பயின்றதால் அன்னாரை அந்நாள் தொட்டே நன்கறிவேன்.

செட்டிநாட்டுத் தேவகோட்டை வள்ளல் சிவபூசைச் செல்வர் மெய்யப்ப செட்டியாரின் அறக்கட்டளையில் படித்த செட்டிநாட்டுப் பிள்ளைகளுள் மீனவரும் ஒருவர்; வள்ளல் அவர்கள் இருமுறை மயிலம் வந்தபோது மீனவரின் வரவேற்புக் கவிதை தான் மேடையில் தமிழ்த் தென்றலாக வீசியதை நான் நன்கறிவேன். மயிலத்தில் தொடங்கிய தமிழ் உறவு காரைக்குடியிலும் ஐம்பதாண்டுக் காலம் அறாத தமிழ் உறவானது. அதன் அடையாளமாகவே காப்பியக் கவிஞர் மீனவன் என்ற அவர்பற்றிய கவிதை வாழ்க்கை வரலாற்று நூலை அண்ணாமலைப் பல்கலைக் கழக உதவியுடன் நான் எழுதி வெளியிட நேர்ந்ததை எண்ணி மகிழ்கின்றேன்.

இவ்வாறு அன்னாருடன் பழகும் பாங்கில் அவர்தம் செட்டிநாட்டரசர்

தமிழ்வேள் முத்தையா செட்டியார் வாழ்க்கை வரலாற்றுக் கவிதை நூலுக்கு ஆய்வுரை எழுதுமாறு பணித்தபடி எழுதித்தந்த தொடர்ச்சியில் பரந்தாமன் பாமாலை என்னும் நூலுக்கும் ஆய்வுரை எழுதித்தரப் பணித்தார்கள். அது பற்றிய கருத்துத்தேடலின் நிலையில் அன்னார் அமரராகி விட்டார்கள்.

இந்நிலையில் அவ் ஆய்வுரையைக் கோவிலூர் ஆண்டவர் அருளாலும் 13ஆம் குருமகா சந்நிதானம் ஆசியை நினைத்தும் எழுதும் தொடர்ச்சியில் இரட்டிப்பு மகிழ்ச்சி எனக்குள் உந்தித்தள்ளியது.

இப்பரந்தாமன் பாமாலையை வெளியிட்டவர்கள் நாட்டரசன்கோட்டைவீர.ஆ.ராம.வெ. (புனலூர்) கண்ணப்ப செட்டியார் - திருமதி. சுசீலா ஆச்சியாம் தம்பதியர் ஆவர். அவர்கள் காப்பியக் கவிஞரின் மகளும் மருமகனும் ஆவார்கள் என்றதோடு திருமதி. சுசீலா எங்கள் இராமசாமி தமிழ்க் கல்லூரியில் பயின்ற முன்னாள் மாணாக்கி என்ற வகையில் ஆசானாக இருந்த பூரிப்பில் குதூகலித்து ஆய்வுரையைத் தொடங்குகின்றேன்.

செந்தமிழ் புரக்கும் செட்டிநாட்டில் விலாசம் என்ற சொல், பெரும் பொருள் பொதிந்த ஒன்றாகும். வரகவிபாடுவார் முத்தப்பர் திருமுக விலாசம் என்றே ஒருநூல் பாடியருளியவாறு காப்பியக் கவிஞர், பரந்தாமனின் விசாலப் பார்வையில் வாடாத பாமாலையை நூற்றெட்டுத் திவ்விய தேச விலாசமாகப் பாடினார்கள் என்பது என் கணிப்பு.

திருமாலின் பலபெயர்களுள் பரந்தாமன் என்பதும் ஒன்று, பரம் என்றால் மேலான என்று பொருள். தாமன் என்றால் சூரியன் என்று பொருள். மேலான சூரியன் எனச் சுட்டிமொழிந்தாலும் நித்தியப் பொருளான சூரியன் தான் புறஇருள் போக்குவது போல் ஞான பானுவாகிய பரந்தாமன் அஞ்ஞான இருள் போக்கி அருள்ஞானம் வழங்குவான் என்பதால் மீனவர்வாடும் பூமாலையைச் சூட்டாமல் பாடும் பாமாலையைச் சூட்டி மகிழ்ந்தார்.

வைணவ கோட்பாட்டின்படித் துளசியே பரந்தாமனுக்குரியது ஆடிப்பூரமங்கையான ஆண்டாள் துளசியால் சூடிக் கொடுத்த

சிறப்பைப் போல மீனவர் தம்மைப் பெண்ணாக ஏறிட்டுக் கொண்டு துளசி போன்ற இப்பாமாலையைப் பரந்தாமனுக்குத் தீட்டி நீட்டிச்சூட்டியுள்ளார்.

ஏனெனில் பூக்காமலே மணப்பது துளசிமட்டுந் தான் என்ற புனிதத்தை உணர்ந்தால் அது தொட்ட இடமெல்லாம் மணப்பதுடன் இலை, காம்பு, வேர் முதலிய யாவும் மணப்பதைப் போலப் பாமாலையின் எழுத்தும், சொல்லும், பொருளுமாகிய எல்லாம் ஒருசேர மணக்கும் நூல் எனப் பெருமை கொள்ளலாம்.

மேலும் இந்நூல் 108 திவ்விய தேசத்தையும் ஒருசேர இருந்த இடத்திலிருந்தே மானசீகமாகக்கண்டு தொழும் சிறப்பைத் தருவதற்கும் ஒருபொருத்தம் உண்டு. அதுதான் நம்மாழ்வார் என்ற பெயர்ப் பொருள் பொருத்தத்தோடு உணரத்தக்கதாகும்.

எல்லா ஆழ்வார்களுக்கும் இயற்பெயர் உள்ளது போல நம்மாழ்வாரும் சடகோபர் என்ற இயற்பெயர் உடையவராயினும் அப்பெயரின் வழக்கை விட நம்மாழ்வாரே நிலைத்த பெயராயிற்று. இப்பெயரைச் சூட்டியவன் பரந்தாமன், அதற்கொரு வரலாறு உண்டு.

ஆழ்வார் திருநகரியில் அவதரித்த நம்மாழ்வார், மற்றவர்களைப் போலத் திவ்விய தேசங்கட்குப் பயணித்து மங்களாசாசனம் செய்து, அருளிச் செயல்களை (பாசுரங்களை)ச் செய்யாதவர். எனினும் இருந்த இடத்தில் இருந்தவாறே 108 திவ்வியதேசத் தெய்வநாயகர்களை மனதாரத் தொழுது திருவாய் மொழியால் மங்களாசாசன மங்கலம் அருளினார். இதனால் பரந்தாமன் நினைத்தாராம், எல்லா ஆழ்வார்களும் நம்மிடம் வந்து ஆழ்ந்தார்கள்; ஆனால் நாமோ ஆழ்வார் திருநகரியில் அவதரித்த ஆழ்வாரிடம் வந்து ஆழ்ந்து விட்டதால் நம் ஆழ்வார் அவர் ஒருவரே என்றார் என ஆழ்வார் திருநகரி வைபவத்தைச் சிலாகித்துக் கூறுதற்கேற்ப மீனவரின் 108 திவ்விய தேசமும் பாமாலைக்குள் அடக்கம் என்ற பெருமையை வாமன அவதார உயர்ச்சியாய் உணர்ந்து மகிழ்வது பொருத்தமுடைய தன்றோ!

நூலின் தலைப்பான பரந்தாமன் எனும் சொல் நூல் தொடக்கமான திருவரங்கம் பற்றிய ஐந்து பாடலில் மூன்றாவது பாடலில் பவவினை

நோய் அகற்றுமொரு பரந்தாமன் எனப் பாடப்பட்டுள்ளது. அறம் பொருள் இன்பம் என்ற மூன்றில் நடுவணது எய்த இருதலையும் எய்தும் என்றதற்கேற்ப 108 தலத்திலும் பரந்தாமன் பரந்துபட்டுள்ளான் என்ற குறிப்பு உணர்த்தப்பட்டதாக உணரலாம். பின்னும் திரு இந்தளூர் என்னும் தலப்பாடலில் பரிமளரெங்கன் என்னும் பரந்தாமன் எனப் பாடப்பட்டாலும் அது திருமாலின் பலபெயர்களுள் ஒன்று என்பதாக உணருமாறு பொதுவாக உள்ளது.

இந்நூலின் ஒவ்வொரு திவ்விய தேசத்திற்கும் ஐந்தைந்து பாடலாகப்பாடும் வரையறையில் ஒரு தத்துவக் குறிப்புள்ளதாக உணரலாம். வைணவ சித்தாந்தத்தில் இறை சொரூபத்தில் ஐந்து நிலைகள் உண்டு. 1.பரத்துவம் - விண்மீதிருத்தல், 2.அர்ச்சாவதாரம் - மலைமேலிருத்தல், 3.வியூகம் - கடல் மீதிருத்தல், 4.விபவம் - மண்மீதிருத்தல், 5.அந்தர்யாமித்வம் - எங்கும் மறைவாயிருத்தல், இந்த ஐந்துமாகத்தான், தான் உலகில் எங்கும் இருப்பதான பரத்துவத்தை எழுது - என அந்தராத்மாவில் பரந்தாமனே மீனவர்க்கு உசுப்பி உணர்த்திய வகையில் பரந்தாமனை ருசித்துப் பாமாலை பாடினார் என்பதுபோல் ஐந்தைந்து பாடல்கள் பாடப்பட்டன எனலாம்.

நூலின் முதல் திவ்விய தேசமாகத் திருவரங்கம் அமைகிறது. சைவர்களுக்குக் கோயில் என்றால் சிதம்பரத்தைக் குறிப்பது போல வைணவர் கட்குத் திருவரங்கமாகும். இதைப் பூலோக வைகுண்டம் என்பர்.

பரந்தாமம் என்றால் வைகுண்டம் என்று பொருள், பரந்தாமத்தில் உள்ளவன் பரந்தாமன் என்பதால் திருவரங்கம் பூலோக வைகுண்டம் என்பது பொருத்தமாக அமைந்த திவ்விய தேசம் எனலாம்.

இத்தலம் ஆன்மீகத் தளத்தில் மட்டுமின்றி வரலாற்றுத் தளத்திலும் சிறப்பு மிக்கது. கங்கையைப் போல் புனித தீர்த்தமாய்க் காவிரிபாயும் பெருமையுடையதலம். சமூகத்தில் நிலவும் சாதி வேற்றுமையைத் தகர்த்த வகையில் திருப்பாணாழ்வாரை ஆலயப் பிரவேசத்தில் அரங்கன் ஆட்கொண்ட தலம். இதன் தொடர்ச்சியில் தான் இராமானுஜர் திருக்குலத் தாரையும் சீடராகக் கொண்டு அரங்கனின் அருளுக்குப் பாத்திரமாக்கிய புரட்சித்தலம். ஆண்டாளை அங்கீகரித்த

திருமணத்தலம், பதினொரு ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த ஒரே திவ்விய தேசம் திருவரங்கமே ஆகும்.

வண்டார்க்கும் சோலை வரிமதில்சூழ் திருவரங்கம்
கண்டார்கள் உய்திபெற அரவணைமேல் கண் வளர்வான்
கொண்டேத்தும் அடியவர்தம் குலங்காக்கும் நலமுடையான்
விண்டோயும் கோபுரம்சூழ் வித்தகனை வணங்குதுமே!

இதுதான் நூலின் தொடக்கத்திற்கும் திருவரங்கத்தின் முதலுக்குமான பாடலாகும், வண்டுகள் ஆரவாரிக்கும் சோலையும் அழகிய மதிலும் சூழ்ந்த திருவரங்கத்தைக் கண்குளிரக் கண்டு தொழு பவர்கள் உய்தியடையப் பாம்புப் படுக்கையில் தூங்கும் நல்லோனாகிய வித்தகனை வணங்குவோம், அங்ஙனம் வணங்கிக் கொண்டாடும் அடியவர்களையும் அவர்தம் குலத்தையும் காப்பான். இது பாடற்பொருளாகும். இதில் திருவரங்கச்சூழல், பள்ளி கொண்ட பரந்தாமன் நிலை மற்றும் வணங்குவோர்க்கும் அருளும் பேறுகள் பற்றிக் கூறப்பட்டதால் ஒட்டு மொத்தமாக இந்நூலைப் படிப்பதன் பலனைத் தருவதாகப் பாடப்பட்டுள்ளதால் ஞான சம்பந்தரின் பதிகத்தின் இறுதிப்பாடலைத் திருக்கடைக் காப்பு என்பது போல அதாவது பலசுருதிப் பாடலாக மீனவர் அவர்கள் கற்பார்க்கு நூற்பயனை முதலிலேயே திருமாலின் பிரசாதமாக இத்திருவரங்கம் தொட்டு இந்நூற் பயனைத் தந்ததான. புதுமையைப் புதுக்கினார் எனலாம். வணங்குதும் என்பது தன்மைப் பன்மை வினைமுற்றுச் சொல்லாய் அனைவரையும் திருவரங்கரை வணங்க அழைக்கின்றார் கவிஞர் என்பது கருத்து. ஏகாரம் (வணங்குதும் +ஏ) ஈற்றசை என்பது இலக்கணக் குறிப்பு.

அடுத்த பாடலில் ஏழ் மதிலும் ஏழுலகாய் எண்திசையும் பரந்த பரம்பொருளாய் அரங்கன் உள்ளான் என்ற கருத்தும் திட்பநுட்பச் செறிவுடையதாகும். மூன்றாம் பாடல் நவதீர்த்தம் உடையது திருவரங்கம் என்கிறது. இவ்விரு பாடலும் ஏழ். எட்டு, ஒன்பது எனக் கூறுவதால் ஏறுமுகவரிசையில் எண்களை அடுக்கியதால் பரந்தாமனை வணங்குவோர்க்கு வாழ்வில் ஏற்றமேயன்றி இறக்கம் இல்லை என்பதைக் குறிப்பாய்த் தெரிவித்ததாக உணரலாம்.

இந்த எண்களால் தத்துவஎண்ணங்கள் விரிகின்றன. பொதுவாக இந்து மதத் தத்துவத்தின்படி உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் என்றவாறு உடலமைப்பே ஆலயம் எனலாம். உயிரோடு கூடிய உடலில் ஆறு ஆதாரங்கள் உள்ளன. 1.மூலாதாரம், 2. சுவாதிட்டானம், 3. மணிபூரகம், 4. அனாகதம், 5. விசுத்தி, 6. ஆக்ஞை இவற்றின் மேலதாய் ஏழாம் ஆதாரமாக சகஸ்ரதலம் என ஒன்றைச் சேர்த்து ஏழாதாரத்தால் உடல் இயக்குவதாகக் கூறுவர், இக்குறிப்பே திருவரங்கத்தின் ஏழு சுற்றுமதில், அம்மதில்கள் ஏழுலகம் போல் விரிந்து பரந்துள்ளதால் ஏழ்மதிலும் ஏழுலகாய் எனப்பட்டது. இந்த ஏழ்மதிலுள் தான் அரங்கன் உள்ளான் என்பதைக் குறிக்க எண் திசையாக விரிந்துள்ளான் என்றார் கவிஞர்.

இந்த எட்டு என்பது திருமாலின் அஷ்டோத்திரமாம் ஓம்நமோ நாராயணாய என்ற திருநாமமாகும். எனவே ஏழ்நிலைக்குப் பிறகும் எட்டும் நிலையில் உள்ளான் என்ற கருத்தும் தொனிக்குமாறு கவிஞர் நுட்பமாக உணர்த்த ஏழு எட்டு என்றாரோ என எண்ணத் தோன்றுகிறது.

அடுத்து ஒன்பது என்றதன் குறிப்பை நவதீர்த்தம் என்ற சொல் தருகிறது. நவரசம் என்றால் ஒன்பது என்பது போல உடலில் உள்ள ஒன்பது வகையான ஓட்டைகள் அடைபடாமல் இயங்கும் போதே பரந்தாமனாம் புதிய (நவம் - புதிய) தீர்த்தத்தில் ஆன்மா திளைக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பை நினைவு கூர்ந்தார் கவிஞர் எனலாம். இறைவனைத் தீர்த்தன் என மணிவாசகரும் தீர்த்தன் நற்றில்லைச் சிற்றம்பலத்துள் என்பதால் மீனவர் குறிப்பிடும் நவதீர்த்தம் என்பது திருவரங்கக் கோயிலுக்குள் உள்ள ஒன்பது தீர்த்தங்களைப் புறநிலையில் குறித்தாலும் ஒன்பதும் ஒக்க அடைக்கும் போது உணர மாட்டேன் என்ற அப்பர்வாக்கை நினைப்பிப்பது போல் மீனவர் ஒன்பது ஓட்டைக்குடத்துள் (உடலுள்) உயிர் தங்கியுள்ள போதே நவதீர்த்தமாயுள்ள பரந்தாமனின் திருவருளில் குளிக்கப் பக்தர்களை அழைக்கின்றார் என்பது கருத்து.

நான்காம் பாடலில் பூலோக வைகுண்டமாம் திருவரங்கச் சிறப்பைப் பதினொரு ஆழ்வார்கள் பாடியதால் உயர்ந்தது என்கிறார் மீனவர். ஏனெனில் மேலுலகாகக் கருதப்படும் அந்த வைகுண்டத்தில் யாரும் பரந்தாமனை எந்தப் பாடலாலும் பாடித்துதிக்க மாட்டார்கள் என்பதால் தான் இச்சுவை தவிர யான்போய் என்பதாக ஆழ்வார் ஒருவர் இம்மண்ணுலக வாழ்வை விரும்பியதை நாலாயிரத்தில் காண்பது போல பதினொருவர் தொழும் திருவரங்கன் என்றார்.

இறுதியான ஐந்தாம் பாடல் ஆண்டாளை ஆட்கொண்ட சிறப்புடன் உள்ள திருவரங்கமே துணை என வணங்குவோர் சிறப்புறுவர் என்கிறார் கவிஞர். இதில் ஒரு புதுமையை விதைக்கிறார் மீனவர்.

ஏதேனும் ஒன்றை எழுதத் தொடங்குவோர் சிவமயம், ராமஜெயம், அண்ணாமலையார் துணை என் றெல்லாம் கடவுளை எண்ணி எழுதுவர், யாரும் கடவுளின் வாகனத்தையும் ஆயுதத்தையும் குறித்துத் துணை என எழுதுவோர் இல்லை; ஆனால் வேலும் மயிலும் துணை என்றது மட்டும் கார்த்திகைப் பிறைபோல் அரிதாகச் சைவர்கள் எழுதிக் காட்டிய புதுமை போல ஈண்டு மீனவர் திருவரங்கன் துணை என்று கூறி வணங்குவோர் எனக் கூறாமல் திருவரங்கம் துணை என்றே வணங்குவோர் என்ற கருத்து புதுத்தடம் பதித்த மீனவரின் ஆன்மீகக் கொடைச் சொல் எனலாம்.

இந்தத் திருவரங்கம் துணை என்ற மீனவரின் புதுப் பிரகடனமானது முன்னர்க் கூறிய வைணவத்தின் ஐந்தான இறை நிலை பற்றிய சுருக்கச் சொல்லாக உணரும் போது தான் அந்த அரங்கன் நம்முள் அந்தரங்கமாக நுழைந்து தங்குவான் என்பதைச் சொல்லாமல் சொல்வதால், பரந்தாமன் பாமாலையில் மீனவரின் எழுத்தும் தெய்வம் அவர் எழுது கோலும் தெய்வமாய் எண்ணும் போது மீனவன் இந்நூலைப் படிப்போர் நெஞ்சில் காணொளிக் காட்சியாய்த் தரிசனமாவார் என்பதில் ஐயமில்லை எனலாம்.

# நாலடியார் கூறும் கல்விச் சிறப்பு

செ.குணசீலி குழந்தை தெரஸ்,
தமிழ்த்துறைஉதவிப்பேராசிரியர்,
நாச்சியப்பசுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

சங்கம் மருவிய காலத்தில் பல நூல்கள் தோன்றியுள்ளன. அவற்றில் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மிகவும் இன்றியமையாதவை. அவை தனிமனித வாழ்வியல் அறம் பற்றியும் ஒழுக்கம் பற்றியும் எடுத்துக் கூறுகின்றன. ஒருவன் பெற்ற செல்வங்களுள் மிகப் பெரிய செல்வமாகக் கருதப்படுவது கல்விச் செல்வமே ஆகும். எவராலும் அழிக்க முடியாத செல்வம். அத்தகைய கல்விச்செல்வம் பற்றி நாலடியார் கூறும் கருத்துக்களை இக்கட்டுரையில் காண்போம்.

**கல்வி அழகே அழகு**

குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல – நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு

கல்வி என்பது நடுவு நிலைமை கெடாமல் ஒழுகும் நல்லொழுக்கத்தைக் கற்பிப்பதாகும். தலையைச் சீவி முடிப்பதால் உண்டாகும் கூந்தல் அழகும் முந்தானையில் கரையிட்ட ஆடைகளால் தம்மை அழகுபடுத்திக் கொள்வதால் வரும் அழகும் மஞ்சள் பூசுவதால் வரும் முகத்து அழகும் உண்மை அழகல்ல. இவை புற அழகைக் கூட்டுவன. புது அழகைக் கொடுக்காது. மாறாக, கல்வி அக அழகைக் கொடுக்கும். உள்ளத்தில் நல்ல பல நூல் கருத்துக்களைக் கற்றுக் கொண்டு நடுவு நிலைமையோடு பிறருக்குக் கல்வி கற்றுத் தருகின்ற கல்வியே அழகாகும்.

**அறியாமையைப் போக்கும் மருந்து**

இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாங்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து

இவ்வுலக வாழ்விற்குக் கல்வி கண் போன்றது. கல்வி என்னும்

இச்செல்வம் இவ்வுலக இன்பம் பலவற்றையும் தரக்கூடியது. பிறருக்குத் தருவதால் குறையாது. மேலும் மேலும் அறிவு பெருகும். கற்றவரின் புகழை எங்கும் பரவச் செய்யும் ஆற்றல் பெற்றது. நாம் உயிரோடு இருக்கும் வரை அழிந்து போகாமல் நிலைத்து நிற்கும். ஆதலால் எந்த உலகத்திலும் உள்ள அறியாமை என்னும் இருளை அகற்றுவதற்குச் சிறந்த மருந்தாகக் கல்வி அமைந்துள்ளது. இப்பேறுபெற்ற கல்வியை நாம் முயன்று கற்றுக் கொள்ளவேண்டும்.

### விளை நிலம்

களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப்படும்.

உப்பு களர் நிலத்தில் விளைகின்றது. பிறக்கும் இடத்தால் மட்டமானது தான். இருப்பினும் உப்பில்லாப் பண்டம் குப்பையிலே என்பர். அதனால் களர் நிலத்தில் உண்டான உப்பைச் சான்றோர் நல்ல நன்செய் நிலத்தில் விளைந்த நெல்லை விட மேன்மையாகக் கருதிப் பாதுகாத்துக் கொள்வர். அதுபோல எக்குடியில் பிறந்தவர்களானாலும் கற்றறிந்தவராயின் அவர்களைச் சான்றோர்கள் விளைநிலத்து நெல்போலப் பாதுகாத்து வைத்துக்கொள்வர்.

### குறையாத செல்வம்

வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பின் அரசர் செறினவவ்வார்
எச்சம் எனஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற.

நம் மனதிலிருந்து பிறரால் கவர்ந்து செல்ல இயலாது. நமக்குக் கிடைத்ததைப் பிறருக்குக் கொடுப்பதால் அழிவதில்லை. மன்னன் பிறர் மீது சினந்தாலும் கவர்ந்து கொள்ள முடியாது. ஆதலால் ஒருவன் தன் பிள்ளைகளுக்குச் செல்வம் எனச் சேர்த்து வைக்கத் தக்கது கல்விச் செல்வமே; இக்கல்விச் செல்வமே உயர்ந்தது. நிலைத்தது. அழியாதது. ஆக்கம் தருவது. ஏற்றம் உண்டாக்குவது ஆகும். பிற அல்ல. இதனையே வள்ளுவரும்

கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை (குறள் 400) எனக் கூறுகின்றார்.

ஒருவனுக்கு அழிவு இல்லாத சிறந்த செல்வம் கல்வியே என்பதைப் பிற்காலப் புலவர்களும் வலியுறுத்துகின்றனர்.

**கல்வி எல்லையற்றது**

கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கின் பிணிபல-தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகின் தெரிந்து.

கற்றது கைம்மண் அளவு கல்லாதது உலகளவு கற்றலில் இதை மட்டும் கற்றுக் கொண்டால் போதும் என்று எண்ணக்கூடாது. கல்விக்கு எல்லை இல்லை. கல்வி கற்பவரின் வாழ்நாட்கள் மிகக் குறைவு. மிக் குறைவான இந்த வாழ்நாட்களில் உண்டாகும் பிணிகள் பலவாகின்றன. எனவே, நாம் நல்வழியில் செல்ல நல்ல நூல்களைக் கற்க வேண்டும். அன்னப் பறவை தண்ணீரை நீக்கிப் பாலை மட்டும் பருகுவது போல நம் வாழ்கைக்கு வழிகாட்டும் நல்ல நூல்களை மட்டுமே படிக்க வேண்டும்.

**ஓடம் போன்றது கல்வி**

தோணி யியக்குவான் தொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டான் என்றிகழார் காணாய்
அவன்துணையா ஆறுபோ யற்றேநூல் கற்ற
மகன் துணையா நல்ல கொளல்.

தோணி ஓட்டும் படகுக்காரன் குகனிடம் நட்புக் கொண்டான் இராமன். படகு செலுத்துபவன் எக்குடியைச் சார்ந்தவனாக இருந்தாலும் அவனை மக்கள் தாழந்தவன் என்று இகழமாட்டார்கள். அப்படகு செலுத்துபவன் துணைகொண்டு ஆற்றைக் கடப்பார்கள். அதுபோல நல்ல சாத்திரங்களைக் கற்றவர் எக்குடியைச் சார்ந்தவராயினும் அவர் துணை கொண்டு நல்ல நூல் கருத்துக்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். மாறாக அவர்களின் குடியை விமர்சனம் செய்து வீணாகக் காலம் கழிக்காமல் அவர்களிடம் உள்ள கல்வியை நாம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

**கற்றவரோடு கூடியிருத்தல்**

தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்(து)
உம்ப ருறைவார் பதி.

குற்றமற்ற பழமையான நூல் பொருள்களைக் கேட்கும் தன்மை உடையவரும் மாறுபாடு இல்லாதவரும் ஆயுதம் போன்ற கூர்மையான புத்தியை உடையவரும் ஆகிய சான்றோருடன் கூடி இருந்து மகிழ்வதனைக் காட்டிலும் சிறந்த இன்பம் தருவது வேறு எதுவும் இல்லை. வானத்தின் மேல் தேவர்கள் வாழும் திருநகரைக் காண முயற்சிப்பதைக் காட்டிலும் சான்றோர்கள் கூடியிருக்கும் அவையில் பேசி மகிழ்தல் உயர்வானதாகும்.

**நுனிக் கரும்பு போன்ற சுவையுடையது**

கனைகடல் தண்சேர்ப்ப! கற்றறிந்தார் கேண்மை
நுனியின் கரும்புதின் றற்றே? – நுனிநீக்கித்
தூரின்தின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈரமி லாளர் தொடர்பு.

ஒலிக்கும் கடலின் ஓசையைக் கேட்டுக்கொண்டேயிருக்கும் வேந்தனே சிறந்த நூல்களைக் கற்றறிந்த சான்றோரிடம் கொள்ளும் நட்பு கரும்பின் நுனிப்பகுதியைச் சுவைப்பது போல இனிமை மிகுந்தது. நற்பண்பும் அன்பும் இல்லாதார் நட்பு எதற்கு ஒப்பாகும் என்றால் கரும்பை அடிப்பகுதியிலிருந்து தின்று கொண்டு வந்தால் இனிமை குறைந்து வருவது போலாகும். ஆகையால் இழிவானவர்களோடு நட்புக் கொள்வதை விடுத்து சான்றோர்களுடன் நட்புக் கொள்ளுதல் வேண்டும். சான்றோர்களுடன் கொள்ளும் நட்பு முதலில் வெறுமையாகத் தோன்றும். நாட்கள் செல்லச் செல்லப் பெருமை தரும்.

**பாதிரி மலர் போன்றது**

கல்லாரே யாயினும் கற்றாரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளுந் தலைப்படுவர் – தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு.

பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறும் என்பர். பழமையான சிறப்பினையுடைய பாதிரி மரத்தின் மலர்களைப் புதிய மண்பானையில் சேர்த்தால் குளிர்ச்சி பொருந்தியதாக அந்நீரின் இயல்பு மாறிப்போகும். அத்தண்ணீரானது சுவையானதாகவும் மணம் நிரம்பியதாகவும் இருக்கும். அது போல, கல்லாதவர் கற்றோருடன் கூடி நட்பு, பாராட்டும் போது அவர்களுக்குப் பண்பட்ட அறிவு உண்டாகும்.

### முறையான கல்வி

அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லாது
உலகநூ லோதுவ தெல்லாங் – கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்.

எல்லையற்ற கல்விக்குள்ளே கணக்கு மிகுந்த சாஸ்திர நூல்களைக் கற்று, மெய்யறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும். அதை விடுத்து வெறும் உலக அறிவைத் தரும் நூல்களைக் கற்பதால் எவ்விதப் பயனும் விளைவது இல்லை. வெண்கலம் கலகல என்று இரைச்சல் போடுவது போல மெய்யறிவைத் தர இயலாத கல்வியால் எவ்வித நன்மையும் கிடையாது. பல நூல்களைப் படிக்க வேண்டும் என்று கூறியதோடு மட்டுமல்லாது எப்படிப்பட்ட நூல்களைத் தேர்ந்தெடுத்துப் படிக்க வேண்டும் என்பதையும் கூறியுள்ளது.

### நிறைவுரை

ஒருவன் எத்தகைய செல்வத்தைப் பெற்றிருப்பினும் அதில் அழியாத செல்வம் கல்விச் செல்வமே ஆகும். அக்கல்விச் செல்வத்தைப் பெற நாம் முயற்சி மேற் கொண்டு உயர்ந்த நூல்களைப் படிக்க வேண்டும். அறிவுப் பசி உள்ளோர்க்கு மனநிறைவு வந்து சேரும். எவராலும் அழிக்க முடியாது. பிறரால் அபகரிக்க இயலாது பிறருக்கு கொடுப்பதால் குறையாது. காவல் காப்பது மிக எளிது. சகோதரர்கள் எவராலும் பங்கு போட முடியாது. அத்தகைய அழியாத செல்வமாகிய கல்விச்செல்வத்தைப் பெற நாம் முயற்சிப்போம். பயன் பெறுவோம்.

**25.07.2020 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில்**
**பேராசிரியர் கரு. முத்தையா "கொலைக்களக் காதை" பற்றிச் சொற்பொழிவாற்றினார்.**

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

## பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)
- M.A. Tamil (Subject to Affiliation)

## B.Sc. Visual Communication.,

(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

**திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!**